உ

கணபதி துணை.

# மூன்றாஞ் சம்புடத்தின் முகவுரை.

———:o:———

இந் நூலையும் இப்பதிப்பையும் பற்றிய செய்திகள் பலவும் இதன் முதற் சம்புடத்தின் தலைப்பில் எழுதப்பெற்றுள்ளன.

இம்மூன்றாஞ் சம்புடத்தில், நெய்தற்கலியும் அரும்பத முதலியவற்றின் அகராதியும், நூலாசிரியர் உரையாசிரியர்களின் வரலாறுகளும், முன்னிரண்டு சம்புடங்களிலின்றி இச்சம்புடத்தில் எடுத்துக் காட்டப்பெற்ற நூற்பெயர் முதலியவற்றின் அகராதியும், இப் பதிப்பைப்பற்றிய அபிப்பிராயங்களில் முன் வெளிவாராதவையும் அடங்கியிருக்கின்றன. இச் சம்புடத்தோடு இந்நூல் நிறைவேறிற்று.

இச் சம்புடத்துள்ள நெய்தற்கலியும், இதன் இன்ன பகுதி இன்ன நூலின் இன்ன பகுதியில் இன்னதற்கு மேற்கோளென்பதும் இதன் இன்ன பகுதிக்கு ஒப்புமைப்பகுதி இவையென்பதும் முதலிய குறிப்புக்களோடு, இரண்டாஞ் சம்புடத்தைப்போலவே சொற்களையும் விலங்கு பறவை மரஞ் செடிகொடிகளையும்பற்றிய பல வகைக் குறிப்புக்களும் சேரப்பெற்றது. இக் குறிப்புக்கள் ஆராய்ச்சியாளர்க்குப் பெரிதும் பயன்படுவனவாயிருக்கும்.

அரும்பத முதலியவற்றின் அகராதியில் பழைய செய்திகளை அறிவிக்கவேண்டிப் பல தொடர்மொழிகளும் சேர்க்கப்பெற்றிருக்கின்றன. சில அரும்பதங்களுக்குப் பொருள்களும் குறிக்கப்பெற்றிருக்கின்றன. அவ்வகராதியில் மெய்ப்பாடு என்னுமிடத்து அவற்றின் பெயர்களைமட்டும் ஓர் அகராதியாகக் குறித்திருக்கிறேன். அதற்குக் காரணம் பொருளதிகாரம் உணர்ந்தவர் சிலரென்பதும், அவருள்ளும் இம் மெய்ப்பாட்டைப்பற்றிய செய்தியைத் தெளிவாக உணர்த்தவல்லவரிலரென்பதும், தாமே பயின்றுணர விரும்புவார்க்கு இது கருவியாயுதவுமென்பது மாகும். இம் மெய்ப்பாட்டுப் பெயர்களுள், சில பெயர் ஒவ்வொரு மெய்ப்பாட்டுக்குக் காரணமான குறிப்புக்கள் அல்லது பொருள்களின் பெயரென்றும், சிலபெயர் மெய்ப்பாட்டுக்குக் காரணமான பொருட் பெயரோடு சேர்த்தெழுதப்பட்டனவென்றும், சில பெயர் பரியாயப் பெயர்களென்றும், சில பெயர் பிழைபட்டிருக்கக்கூடுமென்றும் தோற்றுகின்றன.

# மூன்றாஞ் சம்புடத்தின் முகவுரை.

இந் நூல்போல முழுமைக்கும் பண்டை யுரையாசிரியரால் உரையோடு மெய்ப்பாடு குறிக்கப்பெற்ற நூல் திருக்கோவையா ரொன்றுமே. சீவக சிந்தாமணி, சிலப்பதிகாரம், தொல்காப்பிய முதலிய இலக்கணம் இவற்றினுரைகளில் மெய்ப்பாட்டுக் குறிப்புச் சில வுண்டு. அவற்றாலும் இம் மெய்ப்பாட்டுச் செய்திகள் விளங்குவன வாக இல்லை. தமிழிற் சிறந்த நூல்களைப் பாடமாக்கி அவற்றைச் சிறு பொருட்செலவில் பல வருடமாகக் கற்பித்து வரும் மதுரைத் தமிழ்ச் சங்கத்திலோ, தக்க பொருட்செலவுசெய்து சில வருடமாகக் கற்பித்து வரும் சிதம்பரம் அண்ணாமலைச் சருவகலா சங்கத்திலோ, வேறிடத் திலோ நுண்ணறிவும் உலையா முயற்சியுமுடைய தமிழ்ப்புலவர் போதகாசிரியராயிருந்து பல்லாண்டு உழந்தால் நாளடைவில் விளங்கக்கூடுமென்பதும் அதற்கும் ரஸபாவ முதலியவற்றை நுண்ணிதி னறியும் வடநூலுணர்ச்சியாவது அவற்றை அறிந்தவ ருதவி யாவது இன்றியமையாததென்பதும் என் கருத்து.

இம்மூன்றாஞ் சம்புடத்தைப் பதிப்பிப்பதற்குப் பொருளுதவி செய்ய வேண்டுமென்ற என் வேண்டுகோளை அங்கீகரித்து, சென்னைச் சருவ கலாசங்கத்தார் இந்நூலை நிறைவேற்றி ௭௱ ரூபாய் பெறும்படி உத்தரவளித்தார்கள். முன்பு பிரஹ்மஸ்ரீ மகாமகோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி உ. வே. சாமிநாதையரவர்கள் ௧௱ ரூபாய் அளித்தபோது அத்தொகை இத்தொகையிலுள்ள செய்யுள் (கலித்தொகையிலுள்ள செய்யுள் ௧௱) ஒவ்வொன்றையும் தாம் பாராட்டுவதற்கு அறிகுறியாகத் தோற்றுகிற தென்று குறித்திருந்தேன். இச் சருவகலா சங்கத்தார் உத்தரவிட்ட தொகை, அத்தொகைபோல ஐந்து மடங்கு கொண்டதா யிருத்தலால், ஐந்திணை நெறியளாவிய இக்கலித்தொகைக்கு அத்தொகை போல ஐந்து மடங்கு இணைந்த தொகை அளித்தலே ஏற்ற நெறியாகுமென்று கருதினர் எனக் குறிக்கும்படி இருக்கிறது.

> ஆறுந்தொகையீ தாதலினால் ஐயரவர்க ளளித்ததினும்
> வீறும் வண்ணம் நூறாக மேவுந் தொகையில் ஆறறழ்ந்து
> கூறுந்தொகைநூற் றைம்பதொடுங் கூட்டினார்கொல்.

இவ்வுதவியைச் செய்த அவர்கட்கு என் நன்றியறிதலைக் கூறுகிறேன்.

பின்பு சிதம்பரம் அண்ணாமலைச் சருவகலா சங்கத்தாருக்கு ஒரு மனுச் செய்துகொண்டேன். அச்சங்கத்தார் ௩00 ரூபாயை முன்னதாகவே அனுப்பித் தங்களுக்குப் பத்துப் பிரதி போதுமானவை யென்றும் தெரிவித்தார்கள். இது காலத்தாற் செய்த உதவியாய் மகிழ்வித்தது.

திருப்பனந்தாள் ஆதீன கர்த்தர்களாகிய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிநாத ஸ்வாமிகளவர்களைப் போய்ப் பார்த்து 'நான் இதனைப் பதிப்பிக்கத் தொடங்கியிருக்கிறேன், நிறைவேறவேண்டும்' என்று சொன்னபோது அவர்கள் ௬00 ரூபாய் உவந்தளித்து 'இன்னும் அவசியமானபோது முட்டுப்படாவண்ணம் வேண்டிய உதவியைச் செய்வோம்' என்றும் வாக்களித்தார்கள். அஃது எனக்கு இக்காரியத்தை இடையூறின்றி முடித்து விடலாமென்ற இன்பத்தையும் தைரியத்தையும் தந்தது. அவர்கள் தமிழபிமானம் என்னை மகிழ்வித்ததனால் அதனை இம் முகவுரையின் இறுதியில் (பக்கம் அ) 'தமிழ் வளர்க்கு முயற்சி' என்பதில் தெரிவித்திருக்கிறேன். இப்போது பல்கலையும் வளர்க்கக் கருதித் தமிழ் வளர்த்தற்காகச் சென்னைச் சருவகலாசாலைத் தனித் தமிழ்ப் பரீக்ஷையில் ஒவ்வோராண்டிலும் முதன்மையாகத் தேறும் வித்துவானுக்கு ௬000 ரூபாய் பரிசளிப்பதாக (Fund) மூல தனம் ஏற்படுத்தி இப்போது சிலவருடமாக வழங்கிவரும் வள்ளன்மை உலகம் அறிந்ததே.

இத்தொகை ஒவ்வோராண்டிற் பெறுபவர் ஒவ்வொருவரேயாயினும் இவ்வேற்பாடு ஒவ்வோராண்டிலும் பல மக்களை நன்றாகத் தமிழ் ஞானம் உறுவித்தற்கு ஏதுவாகுமென்பது ஒருதலை. ஸ்ரீ குமர குருபரர் ஈட்டிய செல்வம் தமிழ் வளர்ச்சி செய்யாதிருக்குமா!

இப்போது தமிழ் நாட்டினுள் மிக்க செல்வமுடைய தமிழர்கள் பலரிருப்பினும் அவர்களுள் யாரேனும் தம் பாஷையில் அபிமானம் வைத்து அதனை வளர்த்தற்கு எவ்வகையாகவாவது முன் வந்தார்களா? அவர்கள், 'எமக்குத் தமிழில் அபிமானம் அதிகம்' என்று தம்மைப்பற்றித் தாமே சொல்லிக்கொள்ளுஞ் சொல் பொருளுரையாகுமா? அதனாற் பயன் யாது?

உண்மையில் ஒருவர் தம் பாஷையில் அபிமானமுள்ளவராயிருந்தால், தாம் அதனைப்பயின்று அரியபொருளை அறியாதிருப்பாரா? அறியாவிட்டால் அம்மொழிவாணரது தாரதம்மிய மறியச் சக்தியுடையராவாரா? பயில இயலாவிட்டாலும் அதனை வளர்த்தற்கு வேண்டிய முயற்சி செய்யாதிருப்பாரா? அதனை நன்கு அறிந்தவர்பால் அன்பு செய்தலும் அவரைப் பாராட்டுதலும் அவர்க்கு உபகரித்தலுமில்லா திருப்பாரா?

மற்றைச் செல்வர் பாஷாபிமானமற்ற நிலைமையிலிருக்கும் இக்காலத்தில் பணசையாதீன கர்த்தரவர்கள் இப்பரிசிலை ஏற்படுத்தியது மிகவும் கொண்டாடத்தக்க தமிழபிமானச் செய்கையென்பதை யாரே

னும் மறப்பார்களா? தமிழில் உண்மை யன்புள்ள இவ்வுபகார சீலர் இங்ஙனமே உலகத்திற்கு நன்மை புரிந்து கொண்டு நீடூழி வாழ வேண்டு மென்று,

திருப்பனந் தாளுறை செஞ்சடை யப்பர்தஞ் சேவடிக்கட்
சுருப்பனந் தாமரை சேர்தலி னுள்ளஞ் சுலாவி யுறும்பண்
புருப்பனந் தாமணி யாஞ்சாமிநாத வுயர்முனிபா
விருப்பனந் தாவதென் குருமெய்ங் கோன்புக ழேறுறவே.

ஸ்ரீமான் திவான் பஹதூர் பவானந்தம் பிள்ளை அவர்களிடம் நான் பதிப்பித்த கலித்தொகை முதலிரண்டு சம்புடங்களைக் கொடுத்து, அதில் நான் சிரமப்பட்டுச் செய்திருக்கும் வேலைகளிற் சிலவற்றையுஞ் சொன்னேன். அவர்கள்,

'சொல்வன்மை யுண்டெனிற் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறன்று'

என்றபடி, அதற்கு உதவி செய்யவேண்டும் என்று கருதி, அச் சம்புடங்களைப்பற்றிச் சென்னை School Book and Literature Society யாருக்குச் சிபாரிசு செய்து கலித்தொகை வெளிவரும் செலவிற்கு உபயோகிக்கும்படி இருநூறு ரூபாய் நன்கொடையாக அளிக்கச் செய்வித்தார்கள். இவ்வாறு உதவி செய்யுந் தமிழபிமானிக ளிருந்தால் அரிய காரியத்தை மேன்மேலுஞ் செய்ய ஊக்க முண்டாகும். அத் தொகையை அளித்த அச் சங்கத்தாரிடத்தும் அதற்குக் காரணராயிருந்த ஸ்ரீமான் பவானந்தம் பிள்ளை யவர்க ளிடத்தும் நன்றியறித லுள்ளவனாக இருக்கின்றேன்.

எனக்கு இந் நூல் முதலிலிருந்து முழுவதும் பதிப்பித்தற்கு மிக்க உதவியாயிருந்தவர், என் சிறுவனாகிய சிரஞ்சீவி முத்துக்குமார ஸ்வாமியும், சென்னை, மயிலாப்பூர், P. S. High School உபாத்தி யாயரும் என் மாப்பிள்ளையும் ஆகிய சிரஞ்சீவி வே. ராமநாதையரும் ஆவர்.

இடையே உதவி செய்தவர் அன்பர் ஸ்ரீமத் உ. வே. பூ. அ. பாஷ்யம் அய்யங்கார் அவர்கள், B. A., L. T.

இப்போது அரும்பத முதலியவற்றின் அகராதியை ஒழுங்கு படுத்துவதற்கும், ஆசிரியர் வரலாற்றை எழுதுவதற்கும் தத்தமக்கு அவகாச முள்ளபோது உடனிருந்து உதவி புரிந்தவர்கள் சென்னை யூனிவர்ஸிடி ஓரியண்டல் ரிசர்ச் இன்ஸிடிட்யூட் ஸ்டூடெண்டுகளாக இருந்த சிரஞ்சீவிகளாகிய கே. வி. சேஷாசல சர்மாவும், மு. குஞ்சித பாத தேசிகரும், ந. சிவப்பிரகாச தேசிகரும் ஆவர்.

ஆசிரியர் வரலாற்றையும் இன்னும் சில ஆராய்ச்சிகளையும் விரிவாக எழுத நினைத்திருந்தேன். அவையும் முன் செய்வனவாகக் குறித்தவற்றுள் இன்னுஞ் சிலவும் சில காரணங்களால் இப்போது செய்தற்கியலவில்லை. இந்த அளவில் இதனை நிறைவேற்றிய இறைவனுக்கு என் வந்தனத்தைச் சேர்ப்பிக்கிறேன்.

மயிலாப்பூர்,
பிரஜோத்பத்தி௵
கார்த்திகைமீ

இங்ஙனம்,
இ. வை. அனந்தராமையன்.

340/-

# தமிழ் வளர்க்கு முயற்சி.

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவர்களாக விளங்கும் கௌரவம் பொருந்திய ஸ்ரீலஸ்ரீ காசிவாசி ஸ்வாமிநாத ஸ்வாமிகளவர்கள், தமிழ்ப் புலமை மிக்கு, தஞ்சை சரபோஜி மஹாராஜாவின் அவைக்களத்தில் ஆஸ்தான பண்டிதராயிருந்தவரும், கோடீச்சுரக்கோவை தஞ்சைப் பெருவுடையாருலா முதலியவற்றை இயற்றியவரும், சென்னை இராசதானிக் கலாசாலையில் தமிழ்ப் பண்டிதராயிருந்து புகழ்பெற்றவரும் ஆகிய கொட்டையூர் ஸ்ரீ சிவக்கொழுந்து தேசிகரவர்கள் மரபில் ஜனித்தவர்கள். தமிழ்மணங்கமழும் அம்மரபில் தோற்றத்தினாலோ, டில்லித் துலுக்க அரசனையும் தம் தெய்வசக்தி காட்டி வசப்படுத்திய அருட்புலமை வாய்ந்த தமிழ்ப் பெரியாரான ஆதிகுமரகுருபர ஸ்வாமிகள் பீடத்தின் ஏற்றத்தினாலோ அவர்கள் தமிழபிமான மிகுந்து அதனைப் பல வழியாலும் வளர்க்க முயன்று வருகிறார்கள். அம் முயற்சி தமிழுலகத்திற்கு அரும் பயனையும் ஸ்ரீலஸ்ரீ ஸ்வாமிகளவர்களுக்குப் பெரும் புகழையும் தந்து நிறுத்தத்தக்கவை.

சென்னைச் சருவ கலா சங்கத்தாரால் நடத்தப்பெறும் வித்துவான் பரீக்ஷையில், வருடந்தோறும் தமிழில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேர்ச்சிபெற்ற மாணவருக்கு அவ் வருடத்து ௧000 ரூபாய் நன்கொடை யளிப்பதாக ஏற்பாடு செய்து மூன்றுவருடமாக அளித்து வருதல் யாவருமறிந்ததே. இஃது என்றும் நிலைபெற்று நடந்து வருவதற்காக 1928-ஆம் ௵ ஆகஸ்டு மாதத்தில் அமெரிக்கா கண்டத்து டாரண்டோ என்னும் நகரத்திலுள்ள "தி மானுபாக்ச்சரர்ஸ் லைப் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி" (The Manufacturers Life Insurance Company)யில் தங்கள் ஆயுளை ரூபாய் நாற்பதினாயிரத்துக்கு இன்ஷ்யூர் செய்து, 4,46,416 என்னும் எண்ணுள்ள பாலிஸியை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். இதனால் இப்போது பலர் தமிழைச் சிரத்தையோடு படிக்கிறார்கள்.

இவர்களது நுண்ணறிவும் பயனுறுவினை செய்யும் நோக்கமும் அரியன அறிந்துரைக்கும் ஆற்றலும் தமிழபிமானமும் பல வருடங்கட்கு முன்பே எனக்கு மகிழ்வை உண்டாக்கின. அவை நாளுக்கு நாள் வளர்ந்து இப்போது பயனளிக்கத் தொடங்கி யிருக்கின்றன. இன்னும் சில நாளில் நல்ல பயனை மிக வளிக்கு மென்பது நிச்சயம்.

# ஆசிரியர்கள் வரலாறு.

## க. பாலைபாடிய பெருங்கடுங்கோ.

இக்கலித்தொகையில் முதற்பகுதியாகிய பாலைத்திணைக்குரிய 35 கலிப்பாக்களையும் பாடியவர் பெருங்கடுங்கோ அல்லது பெருங்கடுங்கோன்* என்னும் பெயரால் வழங்கப் பெற்றவர்; இவரது இயற்பெயர் இன்னதென்று துணியக்கூடவில்லை. கடுங்கோ என்பது கடியென்னுமுரிச்சொல் ஈறுதிரிந்து கோவென்னும் பெயர்ச்சொல்லோடு புணர்ந்துள்ளது; காரணம்பற்றிய பெயரென்னத்தக்கது. ஆனாலும், சேரமான் மாந்தரன் பொறையன் கடுங்கோ, சேரமான் கடுங்கோ வாழியாதன் என்பன முதலிய சில தொடர்மொழிப்பெயர்களிற் கடுங்கோ வென்பது சேரபரம்பரையினர்களுக்கு வந்திருத்தலாலும் இவர் அப்பரம்பரையினரென்று தெரிதலாலும் அவர்களுக்குப் பிற்காலத்தவர் இவரென்று துணிந்து அப்பெயர் இவர்க்கு இடப்பெற்றதெனின் கடுங்கோ வென்பது இவரது இயற்பெயராம்.

இந்தக் கடுங்கோ வென்பதன் முன் பெருமை யென்னும் பண்புப்பெயர் புணர்ந்து பெருங்கடுங்கோ வென நிற்கின்றது. அப்பண்புப்பெயர் இவர் இளங்கடுங்கோவுக்குத் தமையனென்பது பற்றிப் புணர்க்கப்பெற்றதென்று சிலர் ஊகித்தனர். அவ்வாறு இருப்பினும் இருக்கலாம். அவர் மருதத்திணையைச் சிறப்பித்துப் பாடியிருத்தலால் மருதம்பாடிய இளங்கடுங்கோ என வழங்கப் பெறுகின்றனர். அவர் ஒரு சோழவேந்தனால் ஆதரிக்கப்பெற்றுச் சோணாட்டிலிருந்து மருதத்திணையிலே பயின்றவரென்று தோன்றுகிறது. அவர் செய்தி இங்கே இம்மட்டில் நிற்க,

பெருங்கடுங்கோ என்பதன்முன் பாலைபாடிய என்னும் அடைமொழி வந்துற்றது இவர் இக்கலிப்பாக்களைப் பாடியது பற்றியே

* 'கடுங்கோன்' என்னும் பெயர் பாண்டியர் மரபிலுமுண்டு. 'காய்சின வழுதி முதல் கடுங்கோன் ஈறாக' என வருதல் காண்க.

என்னலாம். இவரது பெயர் * பாலைபாடிய பெருங்கடுங்கோ என்றே பல இடத்தும் உள்ளது. கலி † (௨) 4-8, (௪) 3-6, (௫) 1-3, (௬) 1-6, (௭) 1-3, (௮) 2-6, (௧0) 1-7, (௧௧) 6-7, (௧௨) 1-7, (௧௩) 1-9, 12-13, 20-21, (௧௫) 1-9, (௧௬) 6-8, 10-12, 14-16, (௨0) 1-8, 20-21, (௨௩) 3, (௨௪) 10-11, (௨௫) 9-11, இப்பகுதிகளில் இவர் பாலைத்திணையைப் புனைந்துரைத்திருத்தலை நோக்குக.

மற்றும் இவர் பாடியனவாக அகப்பொருட் செய்யுட்களுள், நற்றிணையில் (9, 48, 118, 202, 224, 256, 318, 337, 384, 391) பத்தும் குறுந்தொகையில் (16, 37, 124, 135, 137, 209, 231, 262, 283, 398) பத்தும் அகநானூற்றில் (5, 99, 111, 155, 185, 223, 261, 267, 291, 313, 337, 379) பன்னிரண்டும் ஆக ‡ 32 ஆசிரியப்பாக்கள் உள்ளன. அவற்றுள் இரண்டொன்று ஐயத்துக் கிடமா யிருப்பினும் மற்றவையெல்லாம் பாலைத்திணைக்குரியவையே. அவற்றுள்ளும் நற் (௪௮) 3-9, (௨௫௬) 3-4, 9-11; (௩௧௮) (௩௮௪) 1-6. குறுந்(௧௨௪) (௨௮௩) 5-8. அகம் (௫) 8-15; (௯௯) (௧௧௧) 4-15; (௧௫௫) 7-16; (௧௮௫) 5-13; (௨௨௩) 3-8; (௨௬௧) (௨௬௭) 5-13; (௨௯௧) 1-21; (௩௧௩) 11-17; (௩௩௭) 5-18; (௩௭௯) 18-26 இந்தப் பகுதிகளில் பாலைத் திணையைப் புனைந்துரைத்திருத்தல் நோக்கற் பாலது.

'பாலைபாடிய' என்னும் இவ்வடைமொழியின் முன் 'சேரமான்' என்னும் குடிப்பெயர் சேர்க்கப்பெற்று, 'சேரமான் பாலை பாடிய பெருங்கடுங்கோ' என்று புறநானூறு 11 ஆம் செய்யுளின் பின் இன்ன நிலைமை இன்னவர் பாடியது என்புழிக் காணப்படு கின்றது. அச்செய்யுள் சேர வேந்தன் [illegible] யமுதக்கொண்

---

ஒவ்வொன்றைச் சிறப்பித்துப் பாடியதால் சிலர் பாராட்டப் பெற்றா ரென்பது, மருதம் பாடிய இளங்கடுங்கோ, மடல் பாடிய மாதங்கீரனார், வெறி பாடிய காமக் கண்ணியார், கொடை பாடிய அல்லது கோடை பாடிய பெரும் பூதனார் என்பவற்றாலும் கோய் பாடியார் அல்லது நொய் பாடியார் என்பத னாலும் அறியப்படுகின்றது.

† (  ) இங்ஙனவளைவி னுட்பட்ட எண்கள் பாடல்களையும் பின் னுள்ள எண்கள் அடிகளையும் குறிப்பன.

‡ புறப்பொருளிலும் ஓர் ஆசிரியப்பா உண்டு; புறம்-282.

டிருப்பது. அச்செய்யுளும் அதன் பின்னுள்ள குறிப்புமே இவர் சேரர்குடிக் குரியாரென்பதை அறியக் கருவியாயிருக்கின்றன.

இவரை அப்பாடலாற் புகழ்ந்தவர் பெயர் 'பேய்மகள் இளவெயினி' என்று பதிப்பிக்கப்பெற்றுள்ளது. அந்நூலுரையாசிரியர் அப்பாடலுக்குப் பொருளெழுதிய பின் 'பாடினி இழை பெற்றாள்; பாணன் பூப்பெற்றான்; யான் அது பெறுகின்றிலேனெனப் பரிசில் கடாநிலையாயிற்று' எனத் துறைச்செய்தியைத் தம் கோட்பாடாக விளக்கிவிட்டு, "இனி இவன் பேயாயிருக்கக் கட்புலனாயதோர் வடிவு கொண்டு பாடினாளொருத்தி யெனவும், 'இக்களத்து வந்தோர் யாவரும் பரிசில் பெற்றார்கள்; ஈண்டு நின்னோடு எதிர்ந்து பட்டோரில்லாமையால் எனக்கு உணவாகிய தசை பெற்றிலேன்' எனத் தான் பேய்மகளானமை தோன்றப் பரிசில்கடாயினாளெனவும் கூறுவாருமுளர்" என்று பிறர் கருத்தையும் எழுதியிருக்கிறார். இப் பிறருரையைப் புனைந்துரையென்று கொள்ளுவதன்றி மெய்யுரையென்று அறிஞர்கொள்ளார். ஆதலின் பின்னுள்ள பிறருரையை விட்டு முன்னுள்ள இவருரையே கொள்ளத்தக்கதாகும்.

இதனால், 'பாடினி இழைபெற்றாள்; பாணன் பூப்பெற்றான்' என்பவை, அவர் பரிசில் வாழ்நரென்பதையும் அவர் இவை பெற்றாரென்பதையும் உணர்த்துகின்றன. அவரைப்போலவே இதனைப் பாடியவரும் பரிசில் பெறுதற்குரிய தகுதியினரென்றால் பாட்டின் பொருள் சிறக்கும். அத்தகுதியும் இசைபற்றியதெனின் இன்னும் சிறக்குமென்பது கூறாமலே விளங்கும். இவர் பெயர் அத்தகுதியினரென்பதைக் குறிக்கும் பெயரென்றே இப்போது என்னால் ஊகிக்கப்படுகின்றது. அஃது என்னெனின், 'இளவெயினி' என்பதை 'இளவேயினி' என்று கொள்ளுதலே. கொண்டால் அது குறிப்புமொழியாகி, புல்லாங்குழலாகிய இளவேயால் பஞ்சமஸ்வரமாகிய இளியென்னும் இசையைச் சுவைபட வாசித்தலிற் சிறந்தவளெனப் பொருள்பட்டு இசைத்திறத்தால் பரிசில் பெறுதற்குரியளெனப் பொருள் சிறக்கும். ஏட்டுச்சுவடிகளில் 'இளவேயினி' என்பது 'இளவெயினி' யென்றும்படிக்கும்படி வேறுபாடுவிளங்காதிருக்குமென்பது ஏடாள்வார்க்குத் தெரியாததொன்றன்று. ஆதலால் யான் ஊகிப்பதை அறிஞர் நுண்ணிதினாராய்ந்து பொருந்து

மெனிற் கொள்ளவும் பொருந்தாதெனின் தள்ளவும் உரியர். இது தவலருந் தொல்கேள்வியான் வருவதன்று. ஆதலால், பதிப்பிப் பவர்க்கு யான் ஊகித்ததே சிறந்ததென்று தோற்றின் மறுபதிப் பில் இளவேயினியென்று வெளிவருதலுங்கூடும். அவர்கள் பதிப் பித்தவற்றுள் முற்பதிப்புக்கு மாறாகப் பிற்பதிப்பிற் சில இருத் தற்கு இஃதும் ஒரு காரணமென்க. அஃது அவர்கள் ஆராய்ந்து பதிப்பிக்கும் பல நூலுள்ளும் காணப்படும்.

இப்பெயரின் முன்னுள்ள பேய் மகளென்பது பேயென்பானின் மகள், அல்லது பேயென்பாளின் மகள் என்று * பொருள்படும். பேயென்பது பேயாழ்வாரைக் குறிக்குங்கால் ஆண்பாலையும் காரைக்காற் பேயாரைக் குறிக்குங்கால் பெண்பாலையும் உணர்த்தி வருதலை நோக்குக. ஒரு பெண்ணின் பெயருக்கு முன் ஈன்றார் பெயரைப் புணர்க்குமிடத்துத் தாயார் பெயரைப் புணர்த்தியதாக ஒன்றும் விளங்காமையானும் பெருங்கோழி நாய்கன் மகள் நக் கண்ணையார், கழார்க்கீரனெயிற்றியா ரென்பவை முதலியவற்றால் தகப்பனார் பெயரைப் புணர்த்துவ தண்டென்பது அறியப்படுத லானும் பேயென்பானின் மகளென்று பொருள் கொள்ளலாமென்று தோற்றுகிறது.

இவராற் பாடப்பெற்றவர் சேரர் மருமானாதல் இவர் தம்பி யின் பெயரோடு சேரமானென்பது யாண்டும் காணப்படவில்லையே யெனின், சேரமானென்பது சேரநாட் டரசுரிமை பெற்றவர்க்கே சிறப்பாக வழங்கப்படுவதென்றும் பெறாதார்க்கு வழங்கப்படுவ தன் றென்றும் அவ்வுரிமையைப் பெற்றவர் இவரையனும் பெறாதவர் அவரென்றும் ஊகிக்கவேண்டியதா யிருக்கிறது.

இவர், மக்கள் இவ்வாறொழுகவேண்டும் இவ்வாறொழுகக் கூடா தெனப் பொதுவான நீதிகளை அறிவித்தலால் அறநூலினும் இவ் வாறே அரச நீதிகளையும் அமைச்சு தூது ஒற்று போர் முதலிய வற்றையும் பற்றிக் கூறுதலால் பொருணூலினும் நானூற்றுள் அகத்தனவாகிய மூந்நூறு இந்நூல் இவற்றில் இன்பத்தைச் சுவைபட அமைத்திருத்தலால் காமநூலினும் சிறந்த அறிவுடையவ ரென்பது விளங்கும்.

* வேறு பொருள் கூறுவாருமுளர்.

அன்றியும் இவர் புராணம் இலக்கு நூல் தாவர நூல், நிமித்த நூல் ஓவிய நூல் இசை நூல் முதலியவற்றையும் அறிந்தவரென்றும் இயற்கை நவிலுதல், உறுதி புகலுதல், மெய்ப்பிக்கும் திறம்பகருதல் இவற்றில் வல்லுநரென்றும் தாம் ஆளும்நாட்டிற்கு உரித்தாகக் கூறப்படும் யானையினியல்பை யறியுந் திறம், அது மதம்பட்ட காலத்தில் அதனை அடக்கவல்ல யாழ்ப்பயிற்சி இவற்றையும் தெய்வ பத்தி, வைதிகவழியில் நம்பிக்கை, கொடை, வீரம், சேர்ந்தவர் பாலன்பு, நன்றியறிதல் முதலிய நற்பண்புகளையு முடையவரென்றும் இவர் ஆங்காங்குக் கூறியிருப்பவை நினைப்பிக்கும்.

இப்பாலைக் கலியிற் சிலஇடத்தும் முல்லைக்கலியிற் சிலஇடத்தும் பாண்டியன் புகழ் கூறப்படுகிறது. அதனை நோக்கி ஓரரசர் மற்றோரரசரைப் புகழாரென்று தமக்குத் தோன்றுங் கருத்தையே ஓராதாரமாகக் கொண்டு இப்பகுதிகள் சேரசோழர் பாடியன அல்ல; நூல் முற்றுமே நல்லந்துவனார் பாடியதென்று சிலர் வரைகின்றனர்.

எட்டுத் தொகையுள் இஃதொழிந்த ஏழும் பலர் செய்யுட்களை யுடையனவா யிருத்தலால் இது மட்டும் அவ்வாறன்றென்பதற்கு என் மனம் அஞ்சும். நான் காட்டிய இக்காரணமன்றியும் இன்னு மூன்று காரணங்களைக் கொண்டும் அவர் கருத்துங் கூற்றுமாகிய இரண்டும் ஒன்றுமென்று நினைக்கிறேன்.

மூன்று காரணம்.

1. அரசர் பிறரைப் புகழக் கூடாதென்னும் விதி எங்கேனு முள்ளதா? நற்பண்புடைய அரசர், புகழ்த் தக்கவராய்ப் பிறரிருப்பின் அவரைப் புகழாது இகழ்வாரா? முடியுடை வேந்தர்தங் குடியொரு மூன்றினும், உதித்தர சாண்டவண் மதித்த மேன்மையினர் அப்பான்மையிலரைப் பாராட்டியுள்ளா ரென்பது இச்சேரனே கொண்கானத்து நன்னனையும் (நற். 391) சோழன்குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் சிறுகுடிகிழான் பண்ணனையும் (புறம். 173.) ஒல்லையூர்தந்த பூதப்பாண்டியன் மையன் மாவன் முதல் நண்பர், ஐவர் தமையும் (புறம். 71) புகழ்ந்ததன்றிப், பொதியிற் செல்வன் திதியனையும் (அகம். 25) புகழ்ந்தா ரென்று திகழ்த்திடலின் அவர் கருத்துப் பொருந்தாமை.

2. 'பெருங்கடுங்கோன் பாலை............. அருஞ்சோழ, னல்லுத்திரன் முல்லை' என்னும் வெண்பா, இன்ன இன்ன திணையை இவரிவர் பாடினரென்று கூறுதல்.

3. இந்நூலுரையில் நல்லந்துவனாரைப் பற்றியுள்ள வாக்கியங்களும் 'நடும் பொருள்சான்ற' என்னும் வெண்பாவும் அவர் நெய்தலைப்பாடினரென்பதற்கும் இந்நூலைத் தொகுத்தாரென்பதற்குமே பொருத்தமாதல்.

இவற்றால் எட்டுத்தொகையுள் ஒருவருரைத்த தொகை நிலைச் செய்யுள் ஒன்றுமின்றென்பதும் அவர் கருத்து ஆதாரமற்றதென்பதும் இவை முறையே சேர சோழர்களாற் பாடப்பெற்று நூல் முற்றும் நல்லந்துவனாரால் தொகுக்கப்பெற்றதென்பதும் புலனாம்.

இவர் இந்நூலில் பாண்டியனைப் புகழ்ந்திருத்தலன்றியும் அவனாட்டிலுள்ள வையையாறு மதுரைமாநகர் பரங்குன்று முதலிய இடங்களையும் அந்நாட்டுக்குச் சிறப்பாகக்கூறப்படும் முத்து, சந்தன முதலிய பொருள்களையும் மதுரையில் தமிழாராயும் செய்தியையும் பாராட்டிக்கூறுதலால் இவர் இளமையில் பாண்டியனால் அன்புடன் ஆதரிக்கப்பெற்று அங்கிருந்து பழகியவரென்று ஊகிக்கலாம். நற்றிணையில் கொண்கானத்து நன்னாட்டு ஏழிற்குன்றம் சிறப்பிக்கப் பெற்றிருத்தல் அஃது அதற்கேற்ற பெற்றித்தாதல் கருதியென்று தோற்றுகிறது.

இவர் வரலாற்றில் இன்னும் கூறத்தக்க செய்திகள் பலவுள வேனும் அதற்கு இப்போது அவகாச மின்மையால் இம்மட்டோடு நிறுத்தலானேன்.

# உ. கபிலர்.

இந்நூலின் இரண்டாம் பகுதியாகிய குறிஞ்சிக் கலியின் 29 செய்யுட்களையும் யாத்தவர் மிகச் சிறந்த புலவராகிய கபிலர். இவர் பிறந்த ஊர் இன்னதென்பது பண்டை நூல்களால் தெரியவில்லை. அது திருவாரூரென்று கபிலரகவலும் திருவாதவூரென்று திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணமும் கூறும். அவ்வகவல் முற்றும் பொய்யுரையென்பதும் இப்புராணம் அத்தகைத்தன்றென்பதும் ஆராய்ச்சியாளர் துணிபு.

இவர் பெயராகிய கபிலரென்பது பண்டைத் தமிழ் நூலில் உருத்திரமூர்த்திக்கு வழங்கும் பெயராயிருத்தலாலும் இவர் சிவபெருமானையும் முருகனையும் பல இடத்தும் புகழ்ந்து கூறுதலானும் இவர் சைவப்பற்றுடையவரென்று கருதப்படுகிறார். ஆனாலும் பலராமன், கண்ணன் இவர்களையும் புகழ்ந்திருத்தலால் வீரசைவரல்லரென்றும் வைதிக சமயத்தவரென்றும் துணியலாம்.

இவர் அந்தணரென்பது புறநானூற்றுச் செய்யுட்களால் தெளியப்பட்ட செய்தி. இவர் அகத்திணையுள் குறிஞ்சித் திணையையும் புறத்திணையுள் பல துறைகளையும் பாடியிருக்கிறார்.

இவரது பாடலை, பத்துப்பாட்டும் எட்டுத் தொகையும், பதினெட்டெனப் பயில் கீழ்க் கணக்குமா, முத்திற நூலினும் வைத்துளர் பெரியோர்.

இவருடைய பாடல்களெல்லாம் சொற்பொருள்களால் தூயனவாயிருத்தலோடு பல பாடல்கள் உள்ளுறை முதலியவற்றாலும் சிறந்திருத்தலால் மிக இனியனவென்று மதிக்கப்பெற்றவை. இதனானே பலருரைகளில் ஆறாம் வேற்றுமைச் செய்யுட்கிழமைக்கு, 'கபிலரது பாட்டு' என்பது உதாரணமாகக் காட்டப்பெற்றிருக்கிறது.

பிறபுலவர் பலநாள் நினைந்து செய்தற்கரிய பொருட்செறிவினையுடையனவாகும் செய்யுட்களை இவர் ஒரு நொடியிலே எண்ணுதிசைக்க வல்லவரென்றும் கற்றறிவும் நன்றாகிய கேள்வி மிக்கவரென்றும் புகழ்ந்து, தான்பகை வென்ற வெற்றியைப் பாட இப்போது அவரில்லையேயென்று ஓராசன் வருந்தினனென்று அவன்

பகைவென்றதனைப் பாடும் புலவரே கூறினாரெனில், இவர் கல்வி கேள்விகளானும் அவற்றால் உள்ள புகழானும் மேலாக மதிக்கப் பெற்றவரென்பதற்கு வேறோர் கட்டுரையும் வேண்டுமோ?

மகளிருட் புலமைசான்ற ஒருவர், 'இவர் மக்களுட் குற்ற மற்ற அறிவினர்' என்றும், 'தாம் புகழத்தொடங்கியதைப் பிறர் புகழ இடமின்றி முற்றும்புகழ வல்லுநர்' என்றும், 'பொய்யா நாவினர்' என்றும் இவரைப் பாராட்டியிருக்கிறார்.

மற்றொரு புலவர் 'இவர் விளங்கச் சொல்லுகின்ற நாவினையும் உள்ளே கவலை இல்லாத நெஞ்சினையும் மெய்ம்மை பாடுதலையும் நல்ல புகழையு முடையவர்' என்று இவரைச் சிறப்பித்திருக்கிறார்.

வேறொரு புலவரும் 'இவரது புகழ் உலகமுள்ள அளவும் அழியாது' என்றும் 'இவர் வாய்மைமொழிபவர்' என்றும் புகழ்ந்திருக்கிறார்.

இவரைப் பற்றிச் சங்கத்துச் சான்றோரான பலர் கூறியுள்ள இச்செய்திகளால் இவரது கல்வியும் பாடுந் திறமையும் கேள்வியும் அறிவினுண்மையும் சொல் வன்மையும் வாய்மையும் மன ஒருமையும் புகழு முதலியவை வெள்ளிடைமலையென விளங்குகின்றன.

சிலாசாதனம் இவரை 'முத்தமிழ்க் கபிலன்' என்று புகழு கின்றது.

அன்றியும் இவர் குறிஞ்சிப் பாட்டை இயற்றி ஆரியவரசன் பிரகத்தனைத் தமிழ் அறிவுறுத்தினாரென்ப. இஃது இவர் பிறர்க்கு இனிது சொல்லுதல் வல்லுநரென்பதை அறிவிக்கும். அவ்வா சனை ஆரியவாசன் யாழ்ப் பிரமதத்தனென்பதும் அவனே பின்பு தமிழ்ப் புலமை சான்று பாடினனென்பதும் அவன் பாடிய செய்யுள் குறுந்தொகையுள் சேர்க்கப்பட்டுள்ளதென்பதும் சிலரது ஊகம்.

'கபிலபரணர் தங்களில் வாது செய்தார்' என்று வீரசோழிய வுரையிற் காணப்படும் வாக்கியம் இவர் வாதாடுதலினும் வல்லவ ரென்பதைக் காட்டும்.

உயர்திணை உம்மைத்தொகைக்கு உதாரணமாகக் காட்டப் பெற்ற 'கபிலபரணர்' என்பது இராம லக்ஷ்மணர் என்பதுபோல நட்புப் பற்றியதோ, இராம ராவணர் என்பதுபோலப் பகை பற்றி யதோ, வாலி சுக்கிரீவர் என்பதுபோல முன் நட்பும் பின் பகையும்

பற்றியதோ வென்று ஐயுறத்தக்க பொருளினதேனும் இவர் இந் நூலின் கண்ணே 'நட்டார்க்குத் தோற்றலை நாணுதோன் குன்று' என்று நட்பைப்பற்றிப் பாராட்டிக் கூறுதலானும், புறத்தின் கண்ணே பாரியைப்பற்றிக் கூறியிருக்கும் பல பாடல்களானும் நட்புக் குணத்தில் மேம்பட்டவரென்று விளங்குதலால் நட்புப் பற்றியதென்றே கொள்ளவேண்டும்.

இவ்விருவரும் அக்காலத்தே கடவுண்மை யுடையவரென நக்கீரனாரையொத்த மதிக்கப்பெற்ற ஒளியுடையவர்கள்.

இவர் மதுரைத்தமிழ்ச் சங்கப்புலவர்களுள் ஒருவரேயாயினும் பெரும்பாலும் அங்கே வதிந்தவரல்லர். பாவலர்க்கிருக்கவேண்டுமென்னும் நாடியவிடம் அடைதலில் ஊக்கத்தாலும் பண்புடையாரொடு பழகுதலில் வேட்கையாலும் வியன்மலைகாடெல்லாம் இயலுவாராயினர். அப்பொழுது பறம்பு மலை கொல்லி மலை தோட்டிமலை முள்ளூர் மலை ஆங்காங்குள்ள காடுகள் இவற்றிலுள்ள சிறப்புக்களைக் கண்டறிந்துள்ளார்.

இவர் கடையெழுவள்ளல்களுள், அஞ்சி ஆய் அல்லாத ஐவரையும் தம்பாடலில் எடுத்துக் கூறியிருக்கிறார். அவ்வைவருள் ஓரி, நள்ளி என்ற இருவரையும் நேரிற் பார்த்ததாகத் தெரியவில்லை. பேகன் என்பவனைக் கண்டு நீ நின்மனைவிக்கு அருளவேண்டும் என்று ஒரு பாடல் பாடியிருக்கிறார். காரியென்பவனைக்கண்டு வரிசையறிந்து ஈயவேண்டுமென்று கூறியும் அவனுடைய வரையாக் கொடையையும் புலையாத்திறலையும் பாராட்டியும் சில பாடல்கள் பாடியிருக்கிறார். பாரியென்பவனோடு நண்புற்று, பறம்புமலையின் கண்ணே பலநாளிருந்து குறிஞ்சி வளத்தையும் அக்குரிசிலுளத்தையும் நன்கறிந்தார். அவை அவர்க்கு மகிழ்ச்சி விளைத்ததனால் பெரும்பாலும் அங்கே வதிவாராயினர். இவர் அவனைக்குறித்துப் பாடிய பாடல்கள் பல.

பாரி, தானே சிற்றரசனேயாயினும், பேரரசர் கொடைமுரசு முழங்கக் கொடுப்பதினும் மிகுதியாகவே இரவலர்க்குக் கொடுத்து வந்தான். அதனால், மூவுலகத்தாலும் அவன் கொடைப்புகழே கேட்கப்பட்டது. தமிழ் நாட்டு மூவேந்தரும் அவன் புகழுறு தலைப் பொறாராய்ப் பறம்புமலையை முற்றினார்கள். பறம்பு மலைக் கோட்டை வாயிற் கதவு அடைக்கப்பட்டது. அம்மூவரும் பல

யாண்டு போர் புரிந்தனர். அப்போது கபிலர், 'இவ்வரணை உங்களால் அழித்தற்கியலாது. இம்மலையோ உழவருழாமலே இங்குள்ளவர்க்கெல்லாம் வேண்டிய உணவுகளையளிக்கும். ஆதலால் இம்முயற்சி பயனின்றாம். நீர் பாணராயும் நும்மனைவியர் விறலியராயும் வந்து பாடி யாடினாற் பெறலாம்' என்று அவரையிகழ்ந்தும் பல படியாகப் பாரியைப் புகழ்ந்தும் பாடினர்,

இறுதியில் மூவரசரும் வஞ்சித்துப் பாரியைக் கொல்லலானார்கள். அந்நிலைமையில் இவர் பெருந்துயருழந்து தம்முயிரைத் துறக்கத் துணிந்தார். துணிந்தும் பாரிக்கிசைந்ததனால் துறவாதிருந்தார். பின்பு அவன் உயிர்துறந்தான். மூவரசரும் பறம்பு மலையைக் கைப்பற்றினார்கள். கபிலர் பாரியின் மகளிரொடு அம்மலையை விட்டுப் பெயர்ந்து அதன் முன்னை நிலைமையையும் அப்போதை நிலைமையையும் குறித்து வருந்திச் சில பாடல் பாடினர். பாரியிறந்த துயரைப்பொறாராய்க் கலங்கி யிரங்கி மெலிந்து கழிவிரக்கத்திற் பயனில்லையென்று பின்பு தெளிந்து அவன் மகளிருக்கு மணம்புரிவிக்கத் தக்க காலத்தையும் தக்க கணவரையுங்கருதி வந்தார்.

சிலயாண்டு சென்றபின் அம்மகளிரை அவர் மரபிலே வாழ்க்கைப்படுத்த நினைந்து விச்சிக்கோன் இருங்கோவேள் என்ற இருவரையுங் கொள்ளவேண்டியும் அவர் உடம்படாமையால் அம்மகளிரை அவர் மரபினும் உயர்ந்த மரபிலே வாழ்க்கைப்படுத்திப் பெண்ணையாற்றங்கரையிலே திருக்கோவலூர்ப்பக்கத்தே நாற்புறமுந் தீச்சூழ வடக்குநோக்கியிருந்து பாரியை நினைந்து ஊழ்வினை மறுபிறப்பிலும் என்னை நின்னொடு கூட்டுவதாகவென்று தவம் புரிந்து உயிர் நீத்தார்.

இவர் வரலாற்றைப் பலரெழுதியுள்ளார். பாரியை வஞ்சித்த விதம் இன்னதென்று விளங்கவில்லை. மூவேந்தர் பாரியைப் பகைத்தகாரணமும் அவன் மகளிர் மணத்தைக்குறித்த வரலாறும் கபிலர் உயிர்விடுத்த செய்தியும் கபிலதேவ நாயனார் இவரா மற்றொருவரா என்பதும் கூறுவதில் கருத்து வேறுபாடுகள் உள்ளன. கபிலதேவநாயனார் இவரின் வேறென்பதே என் கருத்து. என்னால் விரிவாக எழுதப்பெற்று வரும் இவர் வரலாற்றில் எல்லாம் ஆதாரத்தோடு விளக்கப்பெறும்.

## ௩. மருதனிள நாகனார்.

இக் கலித்தொகையுள் மூன்றாம் பகுதியாகிய மருதக்கலி 35 பாடல்களையும் பாடியவர் மருதனிளநாகனா ரென்பவர். 'மருதனிள நாகன் மருதம்' என்பதும் காண்க. இவரது இயற்பெயர் நாக னென்பது. நாகனென்னும் பெயரைப்பூண்ட தமிழ்ப்புலவர் பலர். அவர்களுள், பல புலவர்கள் பெயரினீற்றில் உயர்வுப் பொருளைக் காட்டும் 'ஆர்' என்னும் இடைச்சொல், சேர்ந்து 'நாகனார்' என்றே வழங்கும். அவர்களுள் இன்னவரைக் குறிக்கிறாரென்று கேட்பவர் உணருவதற்காகச் சொல்லுபவர் அப்பெயரின் முன் தாம் குறிக்கும் அப்புலவரது ஊர், தொழில், நிறம், குணம், சிறப்பு, அவர் பாடிய பொருள், அவரது பருவம், அவர் தந்தையார் பெயர் முதலியவற்றுள் ஒன்றையோ பலவற்றையோ சேர்த்துக் கூறுவாராயினர். இது வெள்ளைக்குடி நாகனார், விரிச்சியூர் நன்னாகனார், மதுரைப் பொன் செய்கொல்லன் வெண்ணாகனார், தங்கால் பொற்கொல்லன் வெண்ணாகனார், பொன்னாகன், அம்மெய்யனாகனார், நன்னாகனார், நந்நாகனார், புறத்திணை நன்னாகனார், இளநாகனார், கண்ணனாகனார், மதுரைப் பூதனிளநாகனார், மதுரைக் கடையத்தார் மகன் வெண்ணாகன், மதுரைக் கள்ளிற்கடையத்தன் வெண்ணாகனார், இனிசந்த நாகனார், என்பவை முதலியவற்றால் அறியலாகும்.

இளநாகனென்று மற்றுஞ் சில புலவர் இருந்தமையின் தகப்பனார் பெயரை முதலிற் சேர்த்து இவரை * மருதனிளநாகனென்று வழங்குவாராயினர். இப்புலவர் மருதனென்பவர் புதல்வரெனின் மருதனென்றது தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனாற் பாராட்டப் பெற்றவரும் மதுரைக்காஞ்சி நூலாசிரியருமான மாங்குடி மருதனென்பவரையோ மற்றொருவரையோ என்ற ஐயம் நிகழலாமன்றே! அதனின் நீக்குதற்கு இவர் தந்தையாருக்கு

* பாலை பாடுதற்குப் பெருங்கடுங்கோவும் குறிஞ்சி பாடுதற்குக் கபிலரும் போல, மருதம் பாடுதற்கு இளநாகனார் சிறந்தவரென்று கொண்டு, மருதனென்பது மருதத்திணையைப் பாடுதலிற் சிறந்தவ னென்னும் பொருட்டாய் இளநாகனையே சுட்டி இருபெயரொட்டாய் நிற்கிறதென்று கருதுவாரும் உளர்.

மதுரை என்று அடைகொடுத்து அவரை மதுரைமருத னென்று கூறி இவரை மதுரை மருத னிளநாகனென்று கூறுவாராயினர். அவ்வாறாயின் ஊர்ப் பெயரைமட்டும் முன்வைத்து வெள்ளைக்குடி நாகனா ரென்றாற்போல மதுரை இளநாகனா ரென்றல் சாலாதோ வெனின், மதுரையின் கண்ணே இளநாகனென மற்றொருவர் இருந்தமையின் அது சாலாதென்று அவரை மதுரைப் பூதனிள நாகனா ரென்றும் இவரை மதுரை மருதனிளநாகனா ரென்றும் வழங்கினரென்று தோன்றுகிறது. மதுரைப் பெருமருதிளநாகனா ரென்பதும் இவரது பெயராயிருப்பினும் இருக்கலாம். இளநாகனா ரென்பதற்கு முன் நிறுத்திய 'மருதன்' 'மதுரை மருதன்' மதுரைப் பெருமருது' என்னும் அடைமொழிகள், அவர் ஒருவரென்பதை அறிவிக்கவே வந்தன என்று கொள்ளுவாரு முளர். இக்கொள்கையிரண்டுக்கும் யுக்தி கூறி அமைக்கலாமாதலின், அவரவர் உள்ளத்தாற் றுணிந்ததே முடிவென்க. மதுரைப் பெருமருதிளநாகனாரென்பது மற்றொருவரைக் குறிப்பதாயினும் மருத னிளநாகனாரென்பதும் மதுரை மருதனிளநாகனா ரென்பதும் ஒருவரையே குறிப்பன வென்பது என் கருத்து. சிலர் ஒருகால் இவ்விதமாகவும் மற்றொருகால் மற்றொரு விதமாகவும் வரைந்துள்ளார். அதற்குக் காரணங் குறிப்பிடவில்லை.

இவர் சிவபெருமானையும் முருகக் கடவுளையும் பல இடத்துப் புகழ்தலால் இவரைச் சைவ சமயத்தவ ரென்னலாம். இவர் தேசாபிமானம் பாஷாபிமானம் தெய்வபக்தி முதலிய நற்குணங்களும் அவ்வழிப்பட்ட புலவர்பால் மிக்க மதிப்பு முடையவர் :—

“ கார்முற்றி யிணரூழ்த்த கமழ்தோட்ட மலர்வேய்ந்து
சீர்முற்றிப் புலவர்வாய்ச் சிறப்பெய்தி யிருநிலம்
தார்முற்றி யதுபோலத் தகைபூத்த வையைதன்
னீர்முற்றி மதில்பொரூஉம் பகையல்லால் நேராதார்
போர்முற்றொன் றறியாத புரிசைசூழ் புனலூரன்”.—கலி. 67.

“ கதிர்விரியா வைகலிற் கையாரூஉக் கொண்ட
மதுரைப் பெருமுற்றம் போல”.—கலி. 96.

“ வல்லவர், செதுமொழி சீத்த செவிசெறு வாக
முதுமொழி நீராப் புலனா வுழவர்
புதுமொழி கூட்டுண்ணும் புரிசைசூழ் புனலூர”.—கலி. 68.

“ ஈரணிக் கேற்ற வொடியாப் படிவத்துச்
சூர்கொன்ற செவ்வேலாற் பாடி”.—கலி. 9[illegible]

" தாழ்நீர் வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்
நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை ".—புறம். 55:19-21.

" சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற்
சீர்மிகு முருகன் றண்பரங் குன்றத்
தந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை
யின்றீம் பைஞ்சுனை யீரணிப் பொலிந்த
தண்ணறுங் கழுநீர் ".—அகம். 59: 10-14.

இவற்றில் வையையாறு, மதுரை, திருப்பரங்குன்று, திருச்செந்தூர் முதலியவற்றைச் சிறப்பித்தலால் இவர் தேசாபிமானமும் புலவர்களுடைய புதுமொழி கூட்டுண்ணுதலை நன்கு எடுத்துரைத்தலால் இவரது பாஷாபிமானமும் முருகக் கடவுளைப் புகழ்ந்து கூறுதலால் இவருடைய தெய்வபத்தியும் திருப்பரங்குன்றை நல்லந்துவனார் பாடியதென்று பாராட்டுதலால் அப்புலவர்பால் இவருக்குள்ள பெருமதிப்பும் நன்கு புலனாகும்.

இவர், பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறனையும் பாண்டியன் கூடகாரத்துத் துஞ்சிய மாறன் வழுதியையும் நாஞ்சில் வள்ளுவனையும் சேரசேனாதிபதி பிட்டனையும், கழுவுளையும் பாடியிருக்கிறார்.

இந்நூலில் 35-ம் நற்றிணையில் 12-ம் குறுந்தொகையில் 4-ம் அகநானூற்றில் 23-ம் ஆகக் காணப்படும் இவருடைய பாடல்களால் இவர் அகத்திணையையும் புனைந்து பாடுதலில் வல்லவ ரென்பதும் புறநானூற்றிற் காணப்படும் 3 பாடல்களாலும் இவர் புறத்திணையையும் புனைந்து பாடும் ஆற்றலுடையவ ரென்பதும் விளங்கும்.

பிறரொருவராலும் அறியப்படாத அரிய பொருள்கள் சிலவும் இவர் பாடலால் அறியப்படுகின்றன. அவையாவன:—

1. பிள்ளைப்பணி:

" பூங்கண்ணவை, எறியா வாளும் ஏற்று மழுவும்
செறியக் கட்டி ஈரிடைத் தாழ்ந்த
பெய்புல ரூஉகாய்ப் புலிப்பற் றாலியின்
மையற விளங்கிய ஆனேற்றுஅவிர் பூண் ".—கலி. 85.

" பொலஞ்செய் மழுவொடு வாளணி கொண்ட
நலங்கிளர் ஒண்பூண் நனைத்தரும் அவ்வாய் ".—கலி. 86.

" தொடக்கத்துத் தாயுழை புக்காற்கு அவனும்
மருப்புப்பூண் கையுறை யாக அணிந்து ".—கலி. 82.

இப் பாடல்களால் இளம்பிள்ளைகளுக்கு வைணவமாகிய ஐம்படைத் தாலியேயன்றிச் சைவமாகிய தாலியொன்று மார்பில் அணிவ

தண்டென்பதும் அஃது இடப இலச்சினை யென்பதும் அப்பூணில் பவளத்தாற் செய்த இடபவுருவும் பொன்னாற்செய்த மழு வாள்களி னுருவு முளவென்பதும் தெரிகின்றன. இச்செய்தி வேறெங்கும் கண்டதில்லை. இதனானே இவரைச் சைவ சமயத்துக்கு ஓர் அரும் பொருளளித்தவ ரென்னலாம்.

2. உள்ளிவிழவு:

"கொங்கர், மணிஅரை யாத்து மறுகின் ஆடும்
உள்ளி விழவி னன்ன"—அகம். 368: 16-18.

இதனால், இவ்விழாவிலே கொங்கர், தம்மிடையிலே மணிகளைக் கட்டிக்கொண்டு வீதியிலே ஆடுவரென்ற செய்தி அறிவிக்கப்படு கிறது. இவ்விவரம் வேறெங்கும் காணப்படவில்லை.

3. பரசுராமன் வேள்வி செய்த இடம் செல்லூர் என்பது:

"கெடாஅத் தீயின் உருகெழு செல்லூர்க்
கடாஅ யானைக் குழூஉச்சமந் ததைய
மன்மருங் கறுத்த மழுவாள் நெடியோன்
முன்முயன் றரிதினின் முடித்த வேள்விக்
கயிறரை யாத்த காண்டகு வனப்பின்
அருங்கடி நெடுந்தூண் போல யாவரும்
காண லாகா மாணெழி லாகம்"—அகம் 220: 3-9.

இப்பகுதியால் பரசுராமன் மன்னவரை அழித்து மிகமுயன்று அரிதாக வேள்வி செய்தானென்றும் அவ்வேள்வி செய்த இடம் செல்லூரென்றும் அவ்வேள்வியின் யூபத்தம்பத்தின் இடைப்பகுதி யாருக்குந் தெரியாதவாறு தருப்பைக்கயிற்றால் மறைத்துக் கட்டப் பட்டிருந்ததென்றும் தெரியவருகின்றன.

4. மதுரைவீதிகள் தூயனவாயிருந்தன வென்பது:

"கதிர்விரியா வைகலிற் கைவாரூஉக் கொண்ட
மதுரைப் பெருமுற்றம் போலநின் மெய்க்கட்
குதிரையோ வீறியது"—கலி. 96.

இவ்வடிகளால் மதுரையிற் பெரிய வீதிகளெல்லாம் விடியற் காலத்தே அலகால் சீத்துக் குப்பை வாரித் தூயனவாக்கப்பட்டு வந்தனவென்பது அறியப்படுகின்றது.

5. வியாழமும் வெள்ளியும் அரசியனூல் இயற்றின ரென்பது:

"நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கும் அவைவெடுத்
தறவினை யின்புறூஉ மந்தண ரிருவருந்
திறம்வேறு செய்தியி னூனெறி"—கலி. 99.

இதனால், கள்ளுண்டலை நீக்குதலையே அறமாகக்கொண்டு தேவ குரு தேவருக்கும் நீக்காமையையே அறமாகக்கொண்டு அசுரகுரு அசுரருக்கும் நூலறிவுறுத்தின ரென்று தெரிகின்றது.

6. ஒட்டகம் வெள்ளென்பைத் தின்று பசிதீரு மென்பது:

"குறும்பொறை யுணங்குந் ததர்வெள் ளென்பு
கடுங்கா லொட்டகத் தல்குபசி தீர்க்குங்
கன்னெடுங் கவலைய கானம்"—அகம். 245: 17-19.

இதன்பொருள் ஆராயத்தக்கது.

இவையன்றியும் இவர் பாடலால் திருமாவுண்ணி என்பவள் ஒரு நகிலறுத்தாளென்பதும் காழூரில் ஒரு பூதம் வேங்கை தந்த தென்பதும் முதலிய மற்றுஞ் சில அரிய செய்திகளும் மகளிர் கூந்தலை ஆடவர்களுள் அவர் கணவரே தீண்டுதற்குரிய ரென்பதும் போர்க்களம் வென்றவர்க்கே உரியதென்பது முதலிய சில மரபு களும் குதிரையுடலிற் சேதிகை குத்துதல், மார்பிற் பொறி யொற் றிக்கொண்டாளுதல், கூந்தற்குத் தகரமும் நானமும் பூசுதல் முத லிய பழைய வழக்கங்களும் அறியப்படுகின்றன.

அந்தணர் மணம் புரியுங்கால் எரிவலஞ்செய்தல், ஒருவன் தன் பிள்ளைக்குத் தன் தகப்பனார் பெயரை யிடுதல், குழந்தைகளுக்கு உணவு கூறிட்டு ஊட்டுதல், குழந்தைகளைக் கோயில்களுக்கு விளை யாடச்செய்துவர அனுப்புதல், தெய்வத்தால் தெளிவித்தல், காம னுக்கு வேனிற்காலத்து விழா அயர்தல், ஓலைக்கு முத்திரையிடுதல் முதலியன பண்டேயுள்ள வழக்கமென்றும் விளங்குகின்றன.

வேறு காரியத்தை விட்டிருத்தலென்னும் பொருளில் வழங்கும் 'மினக்கெடுதல்' அல்லது 'மெனக்கெடுதல்' என்பதின் உண்மை யுருவம் வினைக்கெடுதல் என்பதெனவும் 'திலகம்' என்பது ஓர் அணி கலனுக்கும் பெயரெனவும்* 'நோதிறம்' என்பது ஒரு பண்ணெனவும் அரியசொற் பொருள்களை இவர் தெளிவாகும்படி கூறியிருக்கிறார்.

மேலும் இவர் இயற்கையாகவும் செயற்கையாகவும் ஒவ்வோ ருறுப்பிலும் மனத்திலு நிகழுஞ் செயல்களை நுனித்தறிந்து ஆங் காங்கு உணர்த்துவார்; அதனை

"நெடிதுமே ஙிகந்தவை காணினுந் தானுற்ற
வடுக்காட்டக் கண்காணா தற்றாகும்".—கலி. 99.

"இறந்த களியா னிதழ்மறைந்த கண்ணள்".—கலி. 92.

"ஓர்த்த திசைக்கும் பறைபோனின் னெஞ்சத்து
வேட்டதே கண்டாய் கண்".—கலி. 92.

---

* நோதிறமென்று வழங்கும் பண்ணின் பெயர் நோதிறமென்று திருந்த வேண்டுமென்று தோற்றுகிறது.

" முகந்தானே, கொட்டிக் கொடுக்கும் குறிப்பு ".—கலி. 95.
என்பவை முதலியவற்றால் உணரலாகும்.

இவர், தாம் கூறும் பொருளைக் கேட்போர் அதனைக் கண்டோர்போல இன்புறும்படி தன்மையை நவிலுதலில் மிக்க திறமுடையவர்; இதனை

" மையற விளங்கிய மணிமரு ளவ்வாய்தன்
மெய்பெறா மழலையின் விளங்குபூ ணணைத்தாம்
பொலம்பிறை யுட்டாழ்ந்த புனைவினை யுருள்கலன்
நலம்பெறு கமழ்சென்னி நகையொடு துயல்வர
உருவெஞ்சா திடைகாட்டு முடைகழ லந்துகில்
அரிபொலி கிங்கிணி யார்ப்போவா வடிநடப்பப்
பாலோ டலர்ந்த முலைமறந்து முற்றத்துக்
கால்வாறேர் கையி னியக்கி நடைபயிற்றா
ஆலமர் செல்வ னணிசால் பெருவிறல்
போல வருமென் னுயிர் ".

என்பது முதலியவை புலப்படுத்தும்.

இவர் நுண்ணுணர்வுடையவர் ஒத்து இன்புறத் தக்க உள்ளுறை யுவமை கூறுதலில் வல்லவரென்பதை (66, 69, 78) ஆம் பாடல்களால் அறியலாம். மேலும் பிறர் கூறாதனவும் வியக்கத் தக்கனவுமான உவமைகளைப பற்பல இடத்து மிக்க பொருத்தமுடையனவாக இசைத்திருக்கிறார். இதனை அடியிற் குறிக்கும் பாடற் பகுதிகளிற் காண்க.

(68) 24-25. (70) 20-21. (71) 24-26. (72) 1-8. (73) 1-5. (74) 8-9. (78) 15-16, 19-21, 25-26. (81) 25-27. (82) 26-27. (83) 26-31. (84) 10-11, 38. (86) 32-34. (88) 10-11. (89) 4-5, 8-9. (92) 27-29. (96) 22-24,27-29. (98) 1-3. (99) 4-5, 18-21. நகவளைவி னுட்பட்டவை பாடலினெண். மற்றவை அடியினெண்.

இவருடைய பாடல்களில் மற்றும் பல அணிகளும் நகைச் சுவையுமுண்டு. இவரது பாடற்கருத்துத் திருவாதவூரடிகள் வாக்கிலும் வந்துள்ளது.

இவர் இங்ஙனம் பல நயமுறச் செய்யுளியற்றலி லன்றியும் பொருள் கூறுதலிலும் பலரினு மேம்பட்டவரென்பது இறையனாரகப்பொருளுரையின் முற்கூற்றிலுள்ள வாக்கியத்தால் விளங்கும்.

---

## ச. சோழ னல்லுருத்திரன்.

இந்நூலின் நான்காம் பகுதியாகிய முல்லைக்கலி 17 பாடல்களையும் பாடிய ஆசிரியரது இயற்பெயர் உருத்திரனென்பது. உருத்திரனெனப் பட்டார் தமிழ் நூல்களுள் இன்னுஞ் சிலருளர். அவர் சேரன் செங்குட்டுவனோடு பொருத வீரனான உருத்திரனும் கம்பராற் புகழப்பெற்ற ஓரங்கலுட்டுப் பசிப்பிணிப் பகைஞனாகிய உருத்திரனுமாவர். இவ்வாசிரியர் சோழர்குடியிற் றோன்றியவரும் தமிழ்ப் புலமை சான்றவருமாவர்.

உருத்திரனென்னும் பெயரானும் முல்லைத் திணையைப் பாடுமிடத்து உவமைமுகத்தால் இந்திரன் பிரமன் முருகன் பலராமன் முதலியவரை ஒவ்வோரிடத்திற் கூறியிருத்தல்போலாது அந்நிலத்துக்குத் தெய்வமாகிய திருமாலைக் (கண்ணனை) கூறியிருத்தல் போலவே பலஇடத்தும் சிவபெருமானைப் புகழ்ந்து எடுத்துக் கூறுதலாலும் இவர் சிவபெருமானருளாற் றோன்றியவ ரென்றும் சிவபெருமானிடத்துப் பத்திமையுள்ளவ ரென்றும் ஊகிக்கலாம்.

குறுந்தொகை 274-ஆவது செய்யுளின் பின் அதனை இயற்றிய ஆசிரியர் பெயரைக் குறிக்குமிடத்து உருத்திரன் என்ற பெயரொன்று காணப்படுகின்றது. அஃது இவரைக் குறிப்பதென்பர். ஆனாலும் உருத்திரனென்பது அழித்தற் கடவுட்கே பெரும்பாலும் வழக்காதல்பற்றி இவன் அத்தீய தொழிலினனல்லன் என்றற்கு நன்மையென்னும் அடைமொழியை முன்சார்த்தி நல்லுருத்திரனென்று வழங்கினர் போலும். புறம் 190-ஆவது செய்யுளின்பின் இஃது இன்னவர் பாட்டு என்னுமிடத்து, 'சோழன் நல்லுருத்திரன் பாட்டு' என்று காணப்படுதலால் இவர் சோழர்குடியிற் றோன்றியவரென்று தெரிகின்றது. 'அருஞ்சோழ, னல்லுத் திரன்முல்லை' என வருதலுங்காண்க. இவர் செய்யுளென்று தெரிந்தவை இந்தப் பத்தொன்பதுமே.

ருத்திரனென்பது, உருத்திரனென்று ஆதலன்றியும் ருதிரம் ரேகையென்பன முதன் மெய்யொழிந்து உதிரம் ஏகையென்றாதல் போல உத்திரன் என்றாகி, அடைமொழியோடு சேர்ந்து நல்லுத்திரன் எனவும் இவரது பெயர் வழங்கும்.

இவர் சோழர்குடியிற் றோன்றியவரே யாயினும் இவர் அரசுரிமை பெற்றிருந்தாரென்று துணிய இயலவில்லை. இவர் பாடல்களைப் பொதுவாக நோக்காது கூர்ந்துநோக்கின் அவற்றுட் சில, இவர் அரசுரிமை பெற்றிருந்த சோழன் முதலியவரால் துன்புறுத்தப்பட்டு அவர் பால் வெறுப்பும் பாண்டியனால் இன்புறுத்தப்பட்டு அவன் பால் விருப்புமுடையவரா யிருந்தாரென்ற உணர்ச்சியை உண்டாக்கும்படி இருக்கின்றன.

"விளைபதச் சீறிட நோக்கி வளைகதிர்
வல்சி கொண்டளை மல்க வைக்கும்
எலிமுயன் றனைய ராகி யுள்ளதம்
வளன்வலி யுறுக்கு முளமி லாளரொடு
இயைந்த கேண்மை யில்லா கியரோ
கடுங்கட் கேழ லிடம்பட வீழ்ந்தென
அன்றவ ணுண்ணா தாகி வழிநாட்
பெருமலை விடரகம் புலம்ப வேட்டெழுந்து
இருங்களிற் றொருத்த னல்வலம் படுக்கும்
புலிபசித் தன்ன மெலிவி லுள்ளத்து
உரனுடை யாளர் கேண்மையொடு
இயைந்த வைக லுளவா கியரோ."

என்னும் புறநானூற்றுச் (190) செய்யுள் குறிக்கும் பொருளையும்,

"மலிதிரை யூர்ந்துதன் மண்கடல் வெளவலின்
மெலிவின்றி மேற்சென்று மேவார்நா டிடம்படப்
புலியொடு வின்னீக்கிப் புகழ்பொறித்த கிளர்கெண்டை
வலியினான் வணக்கிய வாடாச்சீர்த் தென்னவன்".

என்னும் இந்நூற் செய்யுட்பகுதி கூறும்பொருளையும் சேர்த்து உய்த்துணர்பவர்க்கே இச்செய்தி புலனும். இவ்வூகத்திற்குக் காரணம் சோழன் முதலியவரிடத்து வெறுப்புத் தோன்றுவிடின் பாண்டியனைப் புகழுதற்குப் பல செய்திக ளிருப்பவும் சோழசேரர் நிலத்தை அவன் கைப்பற்றினனென்று இயன்மொழி கூறுதல் இன்றியமையாததன் றென்பது முதலியவை.

பாண்டிநாடு, வன்புலக் காட்டு நாட்டை மிகவுடையதாயிருந்தமையின் இவர் அங்கே பழகி முல்லைவளங்களை நன்கறிந்தார்.

இவர் முல்லைக்கருப்பொருளைக் கூறுமிடத்து ஆயர், துவராடையுடுப்பவரென்றும் காயாம்பூங் கண்ணியையும் பல மலர்களாலாகிய கண்ணியையும் சூடுபவரென்றும் பசுவினத்தையும் ஆட்டினத்தையும் மிக்குடையவரென்றும் அதனை மேய்த்தற்கு அந்திரை முன்

கோலேஊன்றி நிற்பவரென்றும் ஏறு தழுவும் விழாவைக் கொண்டாடுபவரென்றும் அதற்குப் பறையறைவிப்பவ ரென்றும் அவ்விழாவில் தழுவவிடும் ஏறுகளின் கொம்புகளை மிகக் கூரியனவாகச் சீவிவிடுபவ ரென்றும் மிகுந்த சினமுடைய வலிய கொல்லேறுகளையும் அஞ்சாது தழுவுபவரென்றும் தழுவுங்கால் நீர்த்துறைகளிலும் மரத்தினடிகளிலுமுள்ள தெய்வங்களை முறையாகத் தொழுபவரென்றும் கறத்தற்கரிய பசுக்களைக் கறத்தற்குரிய கழு என்னுங் கருவியையும் சூட்டுக்கோல் உறி முதலியவற்றையும் உடையவரென்றும் கொன்றைக் குழல் ஆம்பற்குழல் முதலியவற்றை ஊதுபவரென்றும் மணஞ்செய்யுங் காலத்தில் வீட்டிற்குச் செம்மண் பூசி இளமணல் பரப்பிப் பெண்ணெருமைக் கொம்பைத் தெய்வமாக வழிபடுபவ ரென்றும் தாதெருமன்றத்துக் குரவை ஆடுபவரென்றும் தெய்வ பத்தியும் இராசபத்தியு மிக்கவரென்றும் கூறியிருக்கிறார்.

ஆயச்சிறுமியர், நீலவாடையுடுத்துக் குழைமுதலிய அணிகளை அணிந்து தோட்டங்களில் ஆயத்தோடு சிற்றிலிழைத்து முல்லைமலர் முதலியவற்றைக் கொய்து கோதையும் இழையும் தழையும் புனைந்து இன்பமாக விளையாடி வந்தனரென்றும் கன்றுகளை மேய்த்துக் கட்டினரென்றும் தமர்க்கு உணவு முதலியன கொண்டுபோய்க் கொடுப்பவரென்றும் கொல்லேற்றை அஞ்சாது தழுவும் வீரமுடைய ஆயரையே மணக்கவிரும்பி அவர் ஏறு தழுவுதலைப் பரண்மீதிருந்து பார்த்து வந்தனரென்றும் தாம் மணக்கவிரும்பியவரது மாலையைத் தாம் மறைவாகச் சூடினரென்றும் தம்முடைய களவொழுக்கம் தாயர்க்குத் தெரியக்கூடாதென்று அஞ்சி மறைத்துவந்தன ரென்றும் தாம் விரும்பின கணவரைத் தம்மையீன்றவர்களின் உடம்பாடு பெற்றே மணப்பரென்றும் இருமணங் கூடாரென்றும் தெய்வங்களுக்குப் பால்மடைகொடுப்பவ ரென்றும் தயிர் கடைபவரென்றும் வெண்ணெய் தேய்த்துக்கொள்பவ ரென்றும் தயிர்மோர் விற்பவரென்றும் கூறியிருக்கிறார்.

வெள்ளை, சில்லை, சேய் (செந்நிற ஏறு), காரி (கருநிற ஏறு), குரால் ( - செங்காரி), புகர் (கபிலநிறஏறு) புள்ளி வெள்ளை (-புள்ளிகளையுடைய வெள்ளேறு, ஆகிய ஏறுகளையும் பலநிறங்கலந்த ஏறுகளையும் அவற்றின் சினமும் விரைந்துவருகையும் மேம்பாடும் இயல்புந் தோன்றக்கூறிப் பாராட்டியிருத்தல படித்து இன்புறற்பாலது.

கொல்லேறு தழுவுஞ் செய்தியைப் பழைய நூல்களுள் இந்நூலிற்போல வேறு நூல்களால் அறிய இயலாது.

மரா ஆல் கடம்பு கொன்றை குருந்து காஞ்சி வெட்சி காயா பிடவு குல்லை கோடல் தோன்றி பாங்கர் நறவு முல்லை தளவு முதலிய மரஞ் செடிகொடிகளை இவர் எடுத்துரைத்திருக்கின்றார்.

அன்றியும் இவர் பாடல்களால் நிலத்தின் தென்பாகத்தைக் கடல்கொண்ட தென்னும் பழஞ்செய்தியும் பாலைத் தயிராகத் தோய்த்தல் முதலியன இன்றியே அதிலிருந்து நெய்கடைந் தெடுத்தல் உண்டென்பதும் அப்பாலை நுகர்தலால் பயன் சிறிதுமில்லை யென்பது முதலாகிய அரிய செய்திகளும், ஆயர் மணஞ்செய்யுங் காலத்துப் பெண்ணெருமையின் கொம்பை வைத்து வழிபடுவரென்னும் பழைய மரபும், ஓரரசன் பிறவரசரை வென்று அவரிடத்தைக் கைப்பற்றியதற்கு அறிகுறியாகத் தன்கொடியை அவ்விடத்திற் பொறித்தலும் கடன் கொடுத்தவர் கடன் வாங்கினவருடைய பொருள்களை விசாரித்தலும் காணாமற்போன தம்பொருளை மறுபடி பெற்றவர் மகிழ்ச்சியுறுதலும் முதலானவை முன்பேயுள்ள வழக்கங்க ளென்பதும் அறியப்படுகின்றன.

இவர் இந்நூலில் ஆயர் ஆய்ச்சியர் கூற்றாகவுள்ள இடத்து,

"மத்தம் பிணித்த கயிறுபோ னின்னலஞ்
சுற்றிச் சுழலுமென் னெஞ்சு". (110)

"கொடுந்தொழுவி னுட்பட்ட கன்றிற்குச் சூழுங்
கடுஞ்சூலா நாகுபோ னிற்கண்டு நாளும்
நடுங்கஞ ருற்றதென் னெஞ்சு". (110)

"தொடீஇய செல்வார்த் துமித்தெதிர் மண்டுங்
கடுவய நாகுபோ னோக்கித் தொடுவாயில்
நீங்கிச் சினவுவாய்". (116)

"கன்றுசேர்ந் தார்கட் கதவீற்றாச் சென்றாங்கு
வன்கண்ண ளாய்". (116)

"கனைபெய லேற்றிற் றலைசாய்த்து". (116)

என அவர் கூற்றுக்குத் தக அவர் இயல்பாக அறியும் பொருள்களை இவர் உவமையாகக் கூறியிருத்தல் மிக்க இன்பந் தருவதாகும். மற்றும் இவர் கூறும் உவமையும் அத்தகையதே.

ஒருவர் பரபரப்புற்றுக் கையை உதறிக்கொண்டு வெளியே செலவதற்கு,

"நெருப்புக்கை தொட்டவர் போல விதிர்த்திட்டு"—என்றும்,

தாம் ஒளித்த பொருள் தம்மிடத்திருந்து வெளிப்பட்டதற்கு,

"காணாமை யுண்ட கருங்கள்ளை மெய்கூர
நாணாது சென்று நடுங்க வுரைத்தாங்கு"

என்றும் வருவன முதலியவற்றை நோக்குக.

இவர் பாடல்களில் சாமுத்திரிகா லக்ஷண நூற்செய்தியும் நிமித்த நூற்செய்தியும் ஆங்காங்குப் பல புராண கதைகளும் வந்துள்ளன. குடஞ்சுட்டு என்பது பசுவுக்குப் பெயராயும் வழக்கு வீழ்ந்தன என்னுஞ் சொற்களுள் 'இதோளி' என்பது முதனீண்டும் வந்திருக்கின்றன.

## ரு. நல்வந்துவனார்.

இந்நூலின் ஐந்தாம் பகுதியாகிய நெய்தற்கலி 33 செய்யுட்களையும் செய்தவரது இயற்பெயர் 'அந்துவன்' என்பது இவர் கல்வி யறிவொழுக்கங்களாற் சால்புற்றபின் சிறப்புப்பொருளை யுணர்த் தும் 'ந' என்னும் இடைச்சொல்லை முதலிலும் உயர்வு குறித்துவரும் 'ஆர்' என்னும் இடைச்சொல்லை ஈற்றிலுஞ் சேர்த்து *நல்வந்துவனாரென்று வழங்கப் பெற்றார். இப்பெயரின் முன் 'ஆசிரியன்' என்பதும் † 'மதுரை யாசிரியன்' என்பதும் சேர்ந்தும் இவர் பெயர் வழங்கும்.

இவர் மதுரையாசிரியர் என்று சிறப்பிக்கப் பெறுதலானும் மதுரையையும் அதனையடுத்த திருப்பரங்குன்றத்தையும் மதுரையின்கண் ஒழுகும் வையையாற்றையும் அதன் கரைக்கண்ணதாகிய திருமருதந் துறை முதலியவற்றையும் புகழ்ந்து கூறுதலானும் இவருடைய ஊர் மதுரையென்று தோற்றுகிறது.

இவருடைய பெயர் ஆசிரியனென்ற சிறப்புப் பெயரை அடைமொழியாகக் கொண்டு வருதலால் இவரை அந்தணரென்பர்.

இவர், (பரி. 8:2; கலி, 1; 129:1-3; 133:3-5; 142:24-28; 150.) சிவபெருமானையும், (பரி. 6:55,69;8) முருகக் கடவுளையும், (பரி. 8:1-2; கலி. 119:3; 123:3; 127:4; 145:64) திருமாலையும், (கலி. 145:64) திருமகளையும், (கலி. 124:1-3;) நம்பி மூத்தபிரானையும், (கலி. 124:1; 134:1-3) கண்ணனையும், (பரி. 8:3) பிரமனையும், (பரி. 8:7) திசை காவலரையும், (பரி. 8:4-7) முப்பத்து மூவரையும் உயர்த்துப் புகழ்தலானும் (பரி. 11:78;) அந்தணர்கள் விழவுதொடங்குதலையும் (பரி. 11:84-85; கலி. 130:9) ஆவுதி பண்ணுதலையும்; (கலி. 126:3-5) அந்தணத் துறவிகள் மாலைக் காலத்தில் முதுமொழி நினைந்து ஒலியும் அசைவுமின்றி நிட்டையிலிருத்தலையும் (பரி. 11: 81-83,91) கன்னியர் தைந்நீராடுந் தவத்தையும் எடுத்துரைத்தலானும் மற்றும் சில காரணங்களாலும் இவரை வைதிக சமயத்தவரென்று துணியலாம்.

---

* 'நன்மை' என்னுஞ்சொல்லை முதலிற்சேர்த்ததாகக் கொண்டு 'நல்லந்துவனார்' என்றே வழங்குவாரும் உளர். † 'மதுரை யாசிரியர்' என்றும் பாடம்.

இவர், (பரி. 8.) திருப்பரங்குன்றத்துக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானைத் தரிசிப்பதற்காக முப்பெருந்தேவரும் முப்பத்துமூவரும் எண்டிசை யிறைவரும் விண்டிகழ் முனிவரு முதலானவர்கள் மண்மிசை வந்தனரென்றும் மக்கள் அங்கு வந்து தாம்தாம் விரும்பும் வரங்களைப் பெறவேண்டி வழிபடுவாரென்றும் அத்தெய்வ சம்பந்தமாக உறுஞ் சூளுறவுக்கு அஞ்சுவரென்றும் பலவகையாகப் பாராட்டிக் கூறுதலால் இவர் முருகக்கடவுளிடத்து மிக்க பத்திமை யுடையவரென்பது வெள்ளிடைமலையென விளங்கும்.

இவரே இந்நூற் கடவுள் வாழ்த்துச் செய்யுளையும் பாடி இந்நூலைத் தொகுத்தவரென்பது முதற் சம்புட முகவுரைக்கண் கூறப்பெற் றிருக்கிறது.

அம்முகவுரையிலுள்ள * 'நாடும் பொருள்சான்ற' † 'பெருங்கடுங்கோன் பாலை' என்னு முதலையுடைய வெண்பாக்களானும் இந்நூலுரையில் நச்சினார்க்கினியர் இவ்வாசிரியரைக் குறிக்குமிடத்து நெய்தற்றிணையில் மாத்திரம் ‡ 'செய்யுள் செய்தார்' என்றும் மற்றைத் திணைகளிலெல்லாம் || கோத்தார் என்றும் விதந்தோதுதலானும் இவர் பாடியவை இவையென்பதும் தொகுத்தது இஃதென்பதும் வலியுறும். (தோல். அகத். சூ. 13. நச். உரையும் பார்க்க.)

இவர் பாடல்கள் இந்நூலில் (1, 118-150) முப்பத்து நான்கும் நற்றிணையில் (88) ஒன்றும் பரிபாடல் முதலிருபத்திரண்டனுள் (6, 8, 11, 29) நான்கும் அகத்தில் (43) ஒன்றுமாக நாற்பது பாடல்கள் காணப்படுகின்றன. இவையன்றித் திருவள்ளுவ மாலையிலுள்ள 'சாற்றிய பல்கலையும்' (18) என்னும் வெண்பாவும் இவரியற்றிய தென்பர்.

இவர் (கலி.139:1-4; 140:17-18) சான்றோரியல்பையும், (கலி. 140:21-22) சான்றோரவையி னன்மையையும் புகழ்ந்து கூறுதலால் இவருக்கு அவர்பாலுள்ள நன்மதிப்புப் புலனாகின்றது. இவர், (கலி. 138: 30-31) மக்கள் அருந்தவஞ் செய்தலால் சுவர்க்கமுறுவரென்று தவத்தைச் சிறப்பித்தும், (கலி. 149:1-7, 10-11) ஊழ்வினை ஊட்டாது விடாதென்பதனால் தீவினை செய்யலாகாதென்றும்,

* பக்கம் 7. † பக்கம் 9. ‡ பக்கம் 893. || பக்கம் 11, 12, 347, 575.

(கலி. 149:4-5,) ஒருவன் கற்பித்தவர் நெஞ்சுவருந்தக் கொடுத்துண்ணு தொழுகின் அவன் கல்விக்குக் கேடுண்டாமென்றும் வலியுறுத்தியும் கூறுகின்றார். இவர் (கலி. 133: 6-14) நீதிகளைச் சுருக்கித் தெளிவாகக் கூறுதலிலும் (கலி. 125:1-4; 142: 6-8; 144: 70-73.) இயற்கையை எடுத்துரைத்தலிலும், (கலி. 138: 15-17, 21-23; 141:7-8; 146: 49-55.) சிறப்பாக உவமை கூறுதலிலும் வல்லவர்.

இவர் (கலி. 146:52-55) வானம்பாடி மழைத்துளிக்கு அலமந்து அதனைப் பெற்றபோது அல்லல் தீருமென்றும் (கலி. 143: 10-13) வேடர் வஞ்சனையாக யாழை வாசித்து மான்களை மனமகிழும்படி செய்து பின்பு பறையறைந்து அவற்றினுயிர் நீங்கச் செய்வரென்றும் (கலி. 121: 7-9) சுருமருப்புப் பலகையைக் கோத்து ஒருவகையாழ் செய்வதுண்டென்றும் கூறியிருக்கிறார்.

(கலி. 147:8-9) மகளிருக்கு உயிரினும் நாண் சிறந்ததென்றும், (கலி. 142-147) அவர் மிக்க காமத்தால் வருந்துங்கால் அறிவழிந்து அந்நாண் முதலியவற்றையு மிறந்து பலபொருளையும் விளித்துக் கலங்கி மொழிவரென்றும், (கலி. 142:24) அவர் தம் கணவர் பிரிந்திருக்குங் கால் அவர் வருகையை அறிய விரும்பிக் கூடற்சுழியிழைப்பரென்றும், (கலி. 138-141) ஆடவர் மிக்க காமத்தால் மடலூர்தல் முதலியன செய்து தாம் விரும்பிய கன்னியரை அடைவரென்றும் இவர் உரைத்துள்ளார்.

(கலி. 138-141.) இவர் மடலேறுதற் செய்தியை மிகப் புனைந்துரைத்திருத்தலும் (பரி. 11:1-15) வானநூற் செய்தியையும், (பரி. 6;11;20) நீர் விளையாட்டுச் செய்தியையும் (கலி. 136) சூதாட்டச் செய்தியையும் ஒவ்வோரிடத்துக் கூறியிருத்தலு முதலியவை இவர் பலவற்றையும் சுவைபடப் பாடும் ஆற்றலுடையவ ரென்பதற்குச் சான்றாம்.

(கலி. 118:1-20; 119; 120:1-9; 121:1-5; 126:1-5; 129: 1-7; 130:1-16; 134:1-10; 143:36-41; 148:1-19.) இவர் பாடியிருக்கும் மாலைக்கால வருணனை மிக்க நயமுடையது.

இவர் பாடல் இசைக்கு முரியனவான பரிபாடலின் கண்ணும் இந்நூலின் கண்ணும் பல காணப்படுதலானும் இவரை மதுரை

மருதனிள நாகனார் (அகம். 59.) தம் பாடலுட் கூறிப் பாராட்டுத லானும் இவர் கூறிய கார்கால வருணனையைக் கல்வியிற் சிறந்தவ ரெனப் பெற்ற கம்பர் தாமும் அப்படியே கொண்டு கார்காலப் படலத்து அமைத்திருத்தலானும் சில சொற்களின் பொருள்களை அறிவுறுத்தற்கு, திருக்குறளுரையில் பரிமேலழகரும் தொல்காப் பிய வுரையில் பேராசிரியர் முதலியவர்களும் இவர் ஒவ்வோரடியி லமைத்துள்ள சொல்லையும் பொருளையுமே எடுத்துக்கொண்டு விரித் துக் கூறி விளக்குதலானும் இவரை இந்நூலுக்கு உரைகண்ட மதுரை யாசிரியராகிய நச்சினார்க்கினியர் (கலி. பக். 893) மிகுத்துப் புகழ்தலானும் இவருடைய பாடலைச் சிறந்த புலவர் பலரும் மிக மேலாக மதித்தனரென்பது தெற்றென விளங்கும்.

## நச்சினார்க்கினியர்.

இக் கலித்தொகைக்குப் பொருள் கண்டவர் நச்சினார்க்கினியரென்பவர். இவரது ஊர் பாண்டிநாட்டதாகிய மதுரை; இவர் அந்தணர் மரபில் பாரத்துவாசர் குடியில் தோன்றியவர். இவ்வுரை * மிகச் சிறந்ததென்பர். இவர் தம் பரந்த அறிவாலும் ஒழியா முயற்சியாலும் இந்நூற்கன்றியும் பத்துப்பாட்டு, சீவக சிந்தாமணி † தொல்காப்பியமாகிய பல துறைப்பட்ட தமிழ்ச் செய்யுணூல்கள் முழுவதற்கும் ‡ உரைகண்டு தமிழ் மக்கட்குப் பேருதவி செய்தவர். தமிழ் விளங்குவதற்காக இவர் பல்லாண்டு நிலவுலகத்தில் வாழ வேண்டுமென்று உலகத்தால் வேண்டப்பெற்றவர். இவற்றால், இவர் வாணாளை வீணாளாக்காத பெரியாரென்று புகழத் தக்கவரே.

சிறந்த அறிவினரான பேராசிரியர், தம் கல்வியறிவை உலகமறிந்து மதிக்க நினைந்து பொருளெழுதி வந்த குறுந்தொகைக்கண் இருபது பாட்டிற்குப் பொருளெழுதாதொழிய இவர் அந்தப் பகுதிக்கெல்லாம் ஏற்பப் பொருளுரைத்திருத்தல், பிறவுரையாசிரியர் 'தொல்காப்பிய வுரைக்கண் வந்துழிக்காண்க' என்று மேற்கோள் காட்டாது விட்ட பகுதிகட்கு இவர் மேற்கோள் காட்டியும் விளக்கியுமிருத்தல் முதலியவையும் தமிழ்க் கல்வி மிக்கவர் பலரினும் இவரே மிக்கவரென்பதற்குத் தக்க சான்றாகும். இவர் சிறந்த தமிழ்ப் பாவமுதங்களைச் சுவை தெரிந்துண்டு மனத்தே தேக்க வைத்தவர். இவர் தொல்காப்பிய வுரை முதலியவற்றில் தமிழ் நூல்கள் பற்பலவற்றிலிருந்து மேற்கோள் காட்டியிருக்கிறார். அந்நூல்களின் பெயர் பிரஹ்மஸ்ரீ மஹா மஹோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி உ. வே. சாமிநாதையரவர்களால் பத்துப்

---

உரைச்சிறப்புப் பாயிர அகவல் 17-30 அடி பார்க்க.

† திருக்கோவையாருரை இவரதென்னும் தவறான கொள்கை இப்போது மாறிவிட்டது.

‡ இவர் தம்முரையை மீட்டும் பார்த்து மாற்றியதில் சிற்சில தடுமாற்றங்கள் உள்ளன.

பாட்டு சீவக சிந்தாமணி இவற்றில் எழுதப்பெற்றிருக்கும் நச்சினார்க்கினியர் வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளன. அன்றியும் இவர் வடமொழிப் பாலவாகிய வேதங்களின் பொருளையும் பலவகைக் கலைகளையும் அறிந்தவர்.

திருக்குறளுரைகாரருள் ஒருவராகிய நச்சரென்பவரும் இவரும் ஒருவரே யென்று நினைப்பார் சிலரும், மற்றொருவராகிய பரிமேலழகரும் இவரும் ஒரு காலத்தவரென்றும் 'குடம்பை தனித்தொழிய' என்னுந் திருக்குறளில் குடம்பை யென்பதற்கு அவருரைத்த பொருளே சிறந்த தென்றும் தமக்கு அது தோன்றவில்லை யென்றும் கூறி இவர் வருந்தினரென்றும் கூறுவார் சிலரும், திருநாவுக்கரசு நாயனாரைப்போல இவரும் இடையே சைன சமயத்தராயிருந்தாரென்று ஊகிப்பார் சிலரும், ஸாயணாசாரியாரைப்போல் இவரும் தம் மாணாக்கர் பலரையும் ஏவி அவர்களைக்கொண்டு செய்வித்த வுரைகளைக் கேட்டுச் செப்பஞ் செய்து அவற்றைத் தம்முரையாகக் கொண்டா ரென்றிசைப்பார் சிலரும், இவர் கூறும் உரையில் சிற்சில இடத்து மாட்டேறுமிகக் காணப்படுதலாலும், சிற்சில இடத்து கருத்து மிக்க ஆழமுடைத்தாதலால் அறித லரிதாயிருத்தலாலும், இதனில் வெறுப்பும் மற்றொன்றில் விருப்புங் கோடலாலும், இவர்மேற் கூசாமல் குற்றமேற்றுவார் சிலரும் உளர்.

இவருரைகளில் பயிலுங்காலத்தில், அவற்றிலுள்ள நன்மை புன்மைகளைப் பலருமறியக் காரணத்தொடு விளக்கி 'நச்சினார்க்கினியருரை யாராய்ச்சி' என ஒன்று எழுதவேண்டு மென்ற கருத்துண்டாகின்றது. எவரேனும் அதனைச் செய்வதற்கு இன்றியமையாத உதவிகளைச் செய்து ஊக்கமளிப்பின் இறைவனருளியிருக்கும் அறிவாற்றலால் அஃது இனிது நிறைவேறும்.

(செந்தமிழ்.)

கலித்தொகை (இரண்டாம் சம்புடம்-மருதக்கலியும் முல்லைக் கலியும்; நச்சினார்க்கினிய ருரையுடன்):—அகப்பொருட்பாடல்களா லமைந்த இவ்வரும்பெருந் தமிழ்நூலையும் அதன் உரையையும், சென்னை பிரஸிடென்ஸிக்காலேஜின் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமத். இவை. அனந்தராமையரவர்கள் செவ்விதின் ஆராய்ந்து முதலில் பாலைக் கலியும் குறிஞ்சிக்கலியும் அச்சிட்டு ஒருசம்புடமாக்கி வெளியிட்டார் கள். இப்பொழுது அவர்களால் மருதக்கலியும் முல்லைக்கலியும் அச்சிடப்பட்டு இரண்டாஞ்சம்புடமாக வெளிவந்திருக்கிறது. இது, முதற்சம்புடத்தினும் பலவகையானும் சிறந்து விளங்குகின்றது. முதற்சம்புடத்திற் காட்டிலும் இதில் ஆராய்ச்சிசெய்யப்பட்ட நூல்கள் அதிகப்பட்டுள்ளன. இதன் ஆராய்ச்சிக்குறிப்பில் இலக் கிய இலக்கணநெறிகளால் அடிப்பட்டு வழங்கிவரும் அருமையான தனிமொழி, தொடர்மொழி, மரபு, உவமம், பொருள் முதலிய பல வற்றிற்கும் பல பலமேற்கோள் காட்டியிருப்பது மிகவும் பாராட்டத் தக்கது. சங்கநூல்பயில்வார்க்கு இன்றியமையாத பழந்தமிழ்நூல் வழக்குப் பலவும் இதன் ஆராய்ச்சிக்குறிப்பால் நன்கறியலாகும்......

(குரோதன ஞூ ஆனிமீ)

---

(சுதேசமித்திரன்.)

கலித்தொகை.

தமிழுக்குச் செய்த தொண்டு.

சென்னை பிரசிடென்ஸி காலேஜ் தமிழ்ப் பண்டிதர் பிரம்மஸ்ரீ இ, வை. அனந்தராமையர் சில மாதங்களுக்கு முன் அகப்பொருட் பாடல்களாலமைந்த இவ்வரும் பெருந் தமிழ் நூலையும் அதன் உரை யையும் செம்மையாக ஆராய்ந்து பாலைக்கலியும் குறிஞ்சிக் கலியும் அச்சிட்டு ஒரு சம்புடமாக்கித் தமிழுலகுக்கு உதவினர். இந்நூல் மிகச் சிறந்ததென்பதையும் இது கிடைத்தற்கு அரிதாகி விட்ட காலத்தில் இதனை இரண்டாமுறை பதிப்பித்து உதவியவர்க்கு நாம் நன்றியறிதலுள்ளவர்களாகவிருக்கவேண்டுமென்பதையும் அப்போதே கூறியுள்ளோம். இப்போது மருதக்கலியும் முல்லைக்கலியும் அச்சிடப் பட்டு இரண்டாஞ் சம்புடமாக வெளிவந்திருக்கிறது. முன்னம் வெளியான சம்புடத்தினும் இதில் ஆழ்ந்த நுண்ணிய ஆராய்ச்சிகள்

பல காணப்படுகின்றன. பிரம்மஸ்ரீ ஐயரவர்கள் மூலத்திலும் உரையி லும் விளங்காத சொற்பொருள்களை விளக்கியிருப்பது பலருக்கும் மிக்கபயனையளிக்குமென்பதில் ஐயமில்லை. அதோடு மிருகம், பறவை, மரங்கொடிகளைப்பற்றிச் செவ்வையாகஅறியும்படி அவற்றினியல்புகளை நன்றாக எடுத்துக் காட்டியிருப்பது ஒரு விசேஷமாகும்.

அஃதன்றி இந்தப்பாகம் இன்ன நூலில், இன்ன விடத்தில் இன்ன விஷயத்திற்கு மேற்கோளெனக் காட்டியிருப்பது இவரது தமிழ்ப் புலமையை நன்கு விளக்குகிறது. பலநூல்களிலிருந்து ஒத்த பகுதிகளை நெடுங்காலமாகத் தேடியெடுத்துச் சேர்த்திருப்பது இவரது சலியா ஊக்கத்தையும் உழைப்பையும் காட்டுகிறது.

"இயல்பாகவே கலித் தொகை மிக்க மதிப்புடையதாயினும் இப்பதிப்பால் இந்நூல் மிக்க கௌரவத்தை யடைந்து விளங்குகின்ற தென்றே சொல்லலாம்" என்பது மஹா மஹோபாத்தியாயர் தாக்ஷி ணாத்ய கலாநிதி பிரும்மஸ்ரீ உ. வே. சாமிநாதையரவர்களின் அபிப் பிராயமாகும். இதை மனப்பூர்வமாக நாம் அங்கீகரிக்கின்றோம். இப்பதிப்பும் பிரும்மஸ்ரீ சாமிநாதையரவர்களின் பதிப்போடு சேர்த்து எண்ணத்தக்க விசேஷங்களை யுடையதே.

இப்பதிப்புக்கு முதன் முதலில் அவர்கள் கநுO ரூபாய் பொரு ளுதவி செய்ததாகத் தெரிகிறதே யொழிய வேறு ஒருவரும் செய்த தாகத் தெரியவில்லை. தமிழ்த்தொண்டாற்றவும் மதப்பிரசாரம் செய்ய வும் ஏற்பட்ட பழந்தமிழ் வல்லுநர்களான மடாதிபதிகள் இத் தகைய விஷயங்களில் சற்றுக் கவனஞ்செலுத்த வேண்டுகிறோம். ஆராய்ச்சியில் சிறந்த பண்டிதர்களை, ஆதரித்து, சங்க இலக்கியங்கள் பலவற்றை அவர்களைக்கொண்டு பதிப்பிக்கும் முயற்சியில் அப்பெரி யார்கள் ஈடுபடுவார்க ளானால் தமிழ்த் தாய்க்கு அவர்கள் பெரு மதிப்புத் தேடிக்கொடுத்தவர்க ளாவார்கள்.

தமிழினிடம் தாம்கொண்ட ஆர்வத்தால் தாம் படித்தறிந்த விஷயங்களை மற்றும் பலரும் படித்துப் பயன்பெறவேண்டுமென்ற நல் லெண்ணத்தால் இம்முயற்சியில் இறங்கியுள்ள பண்டிதருக்குப் போதிய ஆதரவளித்து அவருக்கு ஊக்கமளிக்கவேண்டியது தமிழ் நாட்டினரின் கடமையாகும். இந்நூல்,.........விலாசத்திற்கு எழுதிப் பெறலாம். (உரு......கூ—உரு.)

(ஸ்வராஜ்யா.)

கலித்தொகை புதிய பதிப்பு

ஸ்ரீ அனந்தராமய்யர் அவர்களின் பெருமுயற்சி

"கற்றறிந்தார் ஏத்துங்கலி" என்றும் "கல்விவலார் கண்டகலி" என்றும் தமிழ் அறிஞர்களால் போற்றப்படும் கலித்தொகை சங்க மருவிய எட்டுத்தொகையுள் ஆறாவது; ஐந்திணைப் பாகுபாட்டுடன் அகப் பொருளை உணர்த்தி நிற்கும் நூல். வெவ்வேறு புலவர்களாற் பாடப்பெற்றது. ஆசிரியர் நல்லந்துவனரால் தொகுக்கப் பட்டது.

அகச்சுவை நூலே யாயினும் கலித்தொகை பண்டைத் தமிழர் நாகரீகத்தின் செம்மையைச் செவ்வனே எடுத்துக் காட்டும். அதனை ஆராய்ச்சிசெய்ய விரும்புவார்க்குக் கலித்தொகை ஒரு புதையலே போன்றது. தமிழர் வாழ்வு வளம் பெற்றிருந்த வகையும், அவரது பழக்க வழக்கங்களும், அவருள் ஆடவர் பெண்டிர் இவர்கள் ஒழுகி வந்த முறையும், காதற் கனலில் அவர்களுள்ளம் கசிவதும், பிணக் கின்போக்கும் பின்னர்ச் சேர்தலாற் பிறக்கும் உவகையும் இனிது விவரிக்கப் பெற்றிருக்கின்றன. தலைவன் தலைவி இலக்கணங்களும் அவர் தம்முள் உறவாடும்நேர்த்தியும், பொய்ப்பூசலிடும் பாங்கும் மிகுந்த நயத்துடன் வருணிக்கப் பெற்றிருக்கின்றன. நடை பண்டை நூற்பயிற்சி இல்லாதவர்களுக்குக் கடினமே ஆயினும் தேன்செறிந்த மொழிகளானும், தெள்ளிய உருவகங்களானும் நிறைக்கப்பட்ட இப் பாக்கள் எவர் மனத்தையும் கவரவல்லன. இவற்றைப் பாடியகவிகள் பெருவாழ்வில் நம்பிக்கை உள்ளவர்கள். அழகில் ஈடுபட்டவர்கள். போற்றல்படைத்தவர்கள். பேரின்பம் நுகர்ந்தவர்கள். மனமென்னும் கடலுக்கு ஒருவாறு நிலைகண்டவர்கள். இன்ப உணர்ச்சி ததும்பும் ஒவ்வொரு கலியினும் இவ்வுண்மைகளைக் காணலாம்.

கலித்தொகையை முதன் முதலாகப் பதிப்பித்தவர் காலஞ் சென்ற சி. வை. தாமோதரம்பிள்ளை அவர்கள். நச்சினார்க்கினியர்உரை யுடன்.........வெளிவந்த அப்பதிப்பு இந்நாளில் கிடைப்பதரிதாகி விட்டது. இப்போழ்து வெளிவந்திருப்பது பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் பிரும்மஸ்ரீ இ. வை. அனந்தராமைய ரவர்களின் பதிப்பு. பலஆண்டுகளாகவே ஐயர் அவர்கள் இவ்வா ராய்ச்சியில்கவனஞ் செலுத்தி.வந்திருக்கின்றனர். இன்று வெளியாகும்

கலித்தொகை அவரது முதிர்ந்த அறிவையும் பரந்த ஆராய்ச்சி யையும், தெள்ளென விளக்குகின்றது. தமிழ் மொழியினிடம் அவருக் குள்ள பற்றும், தமிழ் இலக்கியத்திடம் அவருக்குள்ள பயிற்சியும் புத்தகத்தைக் கண்ணுறுவோர் எவர்க்கும் எளிதில் புலப்படும். இப் பதிப்பைச் சிறப்பித்துக் கூறுகையில் பிரும்மஸ்ரீ உ.வே. சாமிநாதய்ய ரவர்கள் இதனுட் காணப்படும் அரிய விஷயங்கள் கீழ்வருபவை என்று குறிப்பிட்டிருக்கிறார்.

க. இதுகாறும் நன்குவிளங்காமலிருந்த கடினபதங்களுக்கு உரிய பொருளை அறிந்து விளக்கித் தக்கமேற்கோள்களைக் காட்டியிருத்தல்.

உ. உரையிலிருக்த பிழைகளை மூலத்தைக் கொண்டும், மூலத்தி லிருந்த பிழைகளை உரையைக்கொண்டும், இவ்விரண்டிலு மிருந்த பிழைகளை வேறு பிரதிகளைக்கொண்டும் செப்பஞ் செய்திருத்தல்.

ங. ஒவ்வொரு பொருளினுடைய இயற்கையும் நன்குபுலப்படும் படி பழைய நூல்களிலிருந்தும் பிற்காலத்து நூல்கள்பலவற்றிலிருந் தும் பற்பல மேற்கோள்களைக் காட்டியிருத்தல்.

ச. பழைய இலக்கண உரையாசிரியர்கள் உரியவிடங்களில் மேற் கோள்களாக ஆண்டிருக்கும் இடங்களைக் கண்டுபிடித்து அவற்றை விளக்கியிருத்தல்.

ரு. இந்நூலிலிருந்தும். வேறுநூல்களிலிருந்தும் ஆங்காங்கு ஒப்புமைப் பகுதிகள் பலவற்றைக் காட்டியிருத்தல்.

“பிறருடைய சகாயத்தைச் சிறிதும்விரும்பாமல் தம்முடைய மனத்தையும் மற்றக் கரணங்களையுமே துணையாகக் கொண்டு இவ் வளவு பெருங் காரியத்தைச் செய்துமுடித்த தொன்றே இப்பதிப்பா சிரியரின் ஆற்றலைநன்குவிளக்கும்” என்றும் ஐயரவர்கள் பாராட்டு கிறார்கள். ஆராய்ச்சியின் அருமை ஆராய்ச்சிவல்லுநருக்கன்றோ தெரி யும். ஐயர் புகழினும் பதிப்பாசிரியருக்கு ஊக்க மூட்டத் தக்கது வேறின்று. ஆயினும் தமிழ் மக்கள் தம் கடனை மறக்கலாகாது. ஒவ் வொரு தமிழபிமானியும் இப்பதிப்பில் ஒருபிரதி வாங்கவேண்டும்; ஒவ்வொரு வாசகசாலையும் ஒவ்வொரு பள்ளிக்கூடமும் ஒன்றோ அல்லது அதிகமானவோ பிரதிகளை வரவழைத்து வைத்துக்கொள்ள வேண்டும்........சென்னை. (குரோதன௵ புரட்டாசிமீ அஉ)

## XIII

### (ஜனமித்திரன்.)

### கலித்தொகை

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் இ. வை. அனந்தராமையரவர்களால் பதிப்பிக்கப்பட்ட கலித்தொகையின் இரண்டாஞ்சம்புடம் (மருதக்கலி, முல்லைக்கலி இரண்டுமடங்கியது) வரப்பெற்றோம். கலித்தொகை கடைச்சங்கப்புலவர்கள் அருளிச்செய்த எட்டுத்தொகையுள் ஒன்று; அகப்பொருளை யுணர்த்தும் நூல்களில் தலையாயது; சொல்லினிமை பொருளினிமையில் மிகச்சிறந்தது. "கற்றறிந்தார் போற்றுங் கலி" என்று இந்நூல் கொண்டாடப் படுவதிலிருந்தே இதன் சிறப்பு விளங்கும். இந்நூலில் ஐந்திணை நிலத்திற்குமுரிய ஒழுக்கவேறுபாடுகள், அவ்வந்நிலத்தின் பழக்க வழக்கங்கள் முதலியன பொதிந்துள்ளன. இந்நூலில் காணப்படும் உவமானங்கள், உலகநீதிகள் முதலியவை மிகவும் அருமையானவை. இந்நூலிற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரை வரைந்துள்ளார். கலித்தொகை நச்சினார்க்கினியருரையுடன் சுமார் ௩௦ ஆண்டுகளுக்கு முன் இச்சமஸ்தானத்தில் நீதிபதியாயிருந்த காலஞ்சென்ற சி. வை. தாமோதரப் பிள்ளையவர்களால் அப்பொழுது இங்கு பிரதிகாவலர் வேலை பார்த்துவந்த காலஞ்சென்ற ஸர் ஏ. சேஷய்யா சாஸ்திரிகள் செய்த பேருதவியைக் கொண்டு வெளியிடப்பட்டது. இப்பொழுது அந்நூலின் அச்சுப்பிரதி கிடைப்பதுமரிதாகிவிட்டது. இப்பால் அப்பொழுது அச்சிலில்லாத பலசங்க நூல்கள் அச்சிடப்பட்டிருப்பதாலும் ஆராய்ச்சி முதலியவை செய்ய அதிக சௌகரியங்கள் வாய்த்திருப்பதினாலும் கலித்தொகை என்னும் அரிய நூலை நல்ல பதிப்பில் ஆராய்ச்சிக்குறிப்புகளுடன் தமிழபிமானிகளுக்கு உதவ வேண்டுமென்ற மேலான எண்ணத்துடன் ஸ்ரீமான் இ. வை. அனந்தராமய்யரவர்கள் மிகவும்பரிச்சிரமமெடுத்துக் கொண்டு இந்நூலைப் பதிப்பித்து வருகிறார். இப்புத்தகம் இருபது பவுண்ட் பெதர் வெய்ட்பேபரில் டிம்மி எட்டுப் பக்கம் அளவில் அச்சிடப்பட்டு நல்லகாலிகோபைண்டு செய்யப்பெற்று வெளிவந்துள்ளது. இப்புத்தகம்,........வேண்டுகிறோம். (கடு-கூ-உடு)

---

# XIV

## (நவசக்தி.)

### கலித்தொகை

சங்கமருவிய நூல்களுள் "கற்றறிந்தார் போற்றுங் கலி" என்று ஆன்றோரால் போற்றப்பெற்றது கலித்தொகையென்னுஞ் சீரியசெந்தமிழ்நூல். இதனைப்பகுதிபகுதியாகச் சென்னை:பிரஸிடென்ஸி காலேஜ் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் அனந்தராம ஐயர் வெளியிட்டு வருவது குறித்து மகிழ்வெய்துகிறோம். பாலைக் கலியும் குறிஞ்சிக் கலியும் அடங்கிய முதற்பகுதி முதலில் வெளியிடப்பட்டது. அதைப்பற்றி யாம் எழுதிய மதிப்புரை நேயர்கள் நினைவிலிருக்கும். அம்மதிப்புரைக்கண் கலித்தொகை மாண்பு சொல்லப்பட்டிருக்கிறது. இது போழ்து இரண்டாம் பகுதி வெளிவந்திருக்கிறது. அதன்கண் மருதக்கலியும் முல்லைக்கலியும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. மூலமும், நச்சினார்க்கினியர் உரையும், பதிப்பாசிரியர் குறிப்பால் மணம்பெற்றிருக்கின்றன. இத்துறையில் உழைத்துவரும் ஸ்ரீமான் ஐயருக்கு எமது நன்றி உரியதாக. இப்பதிப்பின் சிறப்பு.

"இச்சம்புடத்தில் பிற்கூறிய குறிப்புகளைச் சேர்த்ததற்குக் காரணம், முதற்சம்புடத்தைப் பார்த்த தமிழபிமானிகளான அன்பர்களிற் சிலர், உரையிலுள்ள சொற்கள், பண்டை இலக்கியத்துள்ளன; இல்லன; இவை இன்ன சொல்லின் சிதைவு என்ற செய்திகளையும் இயன்றஅளவு தெரிவித்தல் நன்றென்றும், வேறுசிலர், உயிர்களைப் பற்றிக் கூறுமிடத்து மிருகவிசேஷம் பக்ஷிவிசேஷம் விருக்ஷ விசேஷமென்று சிறிதும் அறிய இயலாதபடி விட்டுவிடாமல் இப்பொருள் இன்னதென்று அறியும்படி அவற்றையும் இயன்ற அளவு விளக்கல் பேருபகாரமா மென்றும் விரும்பிக் கூறினவாகும். ஆதலால் அவற்றையும்பற்றி இயன்ற அளவு குறித்திருக்கின்றேன்.

இம்முகவுரையின் பின், முதற்சம்புடத்திலன்றி இச்சம்புடத்தின் வந்துள்ள நூற்பெயர் முதலியவற்றின் அகராதியும் செய்யுள் முதற் குறிப்பகராதியும் * * * * சேர்க்கப் பெற்றிருக்கின்றன.

என வரூஉம் பதிப்பாசிரியர் உரைகளால் அறியக்கிடக்கிறது. இந்நூல் நல்ல காகிதத்தில் அழகிய எழுத்தில் அச்சிடப்பட்டிருக்கிறது.

(கரு—க—உக)

# கலித்தொகையின் அபிப்பிராயம்.

சென்னைப் பிரஸிடென்ஸிக் காலேஜுத் தமிழ்ப்பண்டிதர் பிரம்மஸ்ரீ இ. வை. அனந்தராமையரவர்கள் நன்கு ஆராய்ந்து வெளியிட்ட 'கலித்தொகை' என்னும் அரிய பெரிய செந்தமிழ் நூலைப் பார்த்தேன். முன்னைப் பதிப்பினும் இவர்கள் பதிப்பு, பல திறப்பட்ட ஆராய்ச்சி விளக்கமும் பெற்று ஒத்த சொல்லையும் பொருளையும் ஆங்காங்குப் பிறசங்க நூல்களினின்றும் வேறு தொன்னூல்களினின்றும் எடுத்துக்காட்டிச் சேறலால் எத்தனையோ முறையிற் றிருத்தமு மேம்பாடும் கொண்டு சிறந்துள்ளது. கல்வி வல்லார் கண்ட தமிழ்ப் பெரு நிதியாகிய இவ்வகத்திணை நூல் உச்சிமேற் புலவர்கொ ணச்சினார்க்கினியருரையுடன் இங்ஙனம் செவ்விதாக வெளியிடப் பெறுவதுதான் நூற்பெருமைக்கேற்ப தொன்றாகும். இப்பெருங் காரியத்தை இனிது நிறைவேற்றிய இவர்கள் நற்றமிழறிவு கற்றோரான் மிகவும் உயர்த்திப் பாராட்டத்தக்கது. இவர்கள் மேற்கொண்ட நூற்பதிப்புக்கு வேண்டும் பொருளைத் தமிழபிமானமுள்ள செல்வர்கள் உபகரித்து இவர்கட்கு ஊக்கமளிப்பது தமிழிற்குச் செய்யும் பேருதவியாகும்.

இங்ஙனம்:

ரா. இராகவையங்கார்,

ஸேது ஸமஸ்தான வித்வான்.

இராமநாதபுரம்.
ரு - சு - கசுகூகூ.

# புத்தக விளம்பரம்.

---

## (இ. வை. அனந்தராமையர் பதிப்பு.)

(பெதர் வெய்ட்பேபர்.)

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| கலித்தொகை உரையுடன், | | | |
| 1-ஆம் சம்புடம் (பாலை, குறிஞ்சி) | .... | 5 | 0 |
| 2-ஆம் சம்புடம் (மருதம், முல்லை) | .... | 5 | 0 |
| 3-ஆம் சம்புடம் (நெய்தற்கலி, ஆசிரியர் வரலாறு அரும்பத அகராதிகளுடன்) | .... | 6 | 4 |

(கிளேஸ் பேபர்.)

| | | | |
|---|---|---|---|
| கலித்தொகை மூலம். .... | .... | 1 | 4 |
| களவழி நாற்பது (பழைய உரையோடும் புதிதாக எழுதிய குறிப்போடும் ஒப்புமைப் பகுதியோடும் பிரயோக விளக்கத்தோடும் அரிய முகவுரையோடும் கூடியது.) ... | .... | 0 | 8 |
| ஐந்திணை யெழுபது 66 செய்யுளும் அவற்றுள் 24 செய்யுட்குப் பழையவுரையும் குறிப்புக்களும்; கைக்கிளையும். .... | ... | 0 | 6 |

இவை கிடைக்கும் இடம்:—

வே. ராமநாதையர்,

3/6 பஜார் ரோட்,

மயிலாப்பூர், சென்னை.

---

கோபில் பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை.

கணபதி துணை.

# முதலிரண்டு சம்புடங்களிலன்றி இதில் எடுத்துக் காட்டப்பெற்ற நூற்பெயர் முதலியவற்றின் அகராதி.

# நூற்பெயர் முதலியவற்றின் அகராதி

[யாப்பருங்கலக் காரிகை]
  உறுப்பியல்
[விநாயக புராணம்]
  இந்திரன் சாபம் பெற்ற படலம்
  கணபதி திருவவதாரப் படலம்
  கிருச்சமத ருபதேசம் பெற்ற படலம்
  மூக்கலர் தக்கனுக் குபதேசித் படலம்
[வில்லிபுத்தூராழ்வார் பாரதம்]
  பதினெந்தாம்போர்ச் சருக்கம்
  வெளிப்பாட்டுச் சருக்கம்
ஸ்ரீ மகாபாரதம்
  ஆதிபருவம்

முதலிரண்டு சம்புடங்களில் எடுத்துக் காட்டப்பெற்ற நூற்பெயர்களுக்கு அவற்றின் இருபுறத்தும் இருதலைப்பகரம் [ ] அமைக்கப் பெற்றிருக்கிறது. அச்சம்புடங்களிலும் இதனிலும் இன்னும் சில நூல்களிலுள்ளவையும் எடுத்துக் காட்டப்பெற்றிருக்கும்.

## கலித்தொகை

### செய்யுண்முதலகராதியும் எண்களும்

| முதல் | கலி | திணை | பக்கம் |
|---|---|---|---|
| அகலாங்க | ௧௪௩ | நெ. ௨௬ | ௮௯௪ |
| அகவினம் | ௪௦ | கு. ௪ | ௨௨௮ |
| அகன்ஞாலம் | ௧௧௯ | நெ. ௨ | ௭௫௧ |
| அகன்றுறை | ௭௩ | ம. ௮ | ௪௩௮ |
| அணிமுகமதி | ௬௪ | கு. ௨௮ | ௩௮௪ |
| அணைமருளி | ௧௪ | பா. ௧௩ | ௮௯ |
| அயந்திகழ் | ௧௫௦ | நெ. ௩௩ | ௯௫௭ |
| அரிதாயவற | ௧௧ | பா. ௧௦ | ௬௮ |
| அரிதினிற் | ௧௪௧ | நெ. ௨௪ | ௮௭௫ |
| அரிதேதோ | ௧௩௭ | நெ. ௨௦ | ௮௫௦ |
| அரிநீரவிழ் | ௯௧ | ம. ௨௬ | ௫௪௨ |
| அரிமாணிடிக் | ௧௫ | பா. ௧௪ | ௯௩ |
| அருடீர்ந்த | ௧௨௦ | நெ. ௩ | ௭௫௫ |
| அருந்தவமா | ௩௦ | பா. ௨௯ | ௧௬௨ |
| அரும்பொரு | ௧௮ | பா. ௧௭ | ௧௦௮ |
| அரைசுபடக் | ௧௦௫ | மு. ௫ | ௬௬௪ |
| அறனின்றி | ௩ | பா. ௨ | ௨௪ |
| அன்னைகடுஞ் | ௯௭ | ம. ௩௨ | ௫௯௨ |
| ஆமிழியணி | ௪௮ | கு. ௧௨ | ௨௯௧ |
| ஆறல்ல | ௧௪௭ | நெ. ௩௦ | ௯௩௮ |
| ஆறறியந்த | ௧ | கடவுள் | ௧ |
| இகல்வேந்த | ௧௦௮ | மு. ௮ | ௬௯௨ |
| இடுமுணெடு | ௧௨ | பா. ௧௧ | ௭௯ |
| இணைபட | ௭௨ | ம. ௭ | ௪௩௧ |
| இணையிரண் | ௭௭ | ம. ௧௨ | ௪௫௬ |
| இமையவில் | ௩௮ | கு. ௨ | ௨௦௭ |
| இலங்கொளி | ௨௩ | பா. ௨௨ | ௧௨௭ |
| இவர்திமி | ௧௩௬ | நெ. ௧௯ | ௮௪௨ |
| ஈண்டுநீர் | ௧௦௦ | ம. ௩௫ | ௬௧௧ |
| ஈதலிற்குறை | ௨௭ | பா. ௨௬ | ௧௪௮ |
| உண்கடன் | ௨௨ | பா. ௨௧ | ௧௨௨ |
| உரவுநீர்த் | ௧௩௨ | நெ. ௧௫ | ௮௨௧ |
| உரைசெல | ௧௪௬ | நெ. ௨௯ | ௯௨௯ |
| உறுவளி | ௮௪ | ம. ௧௯ | ௪௯௭ |
| ஊர்க்காணிவ | ௫௬ | கு. ௨௦ | ௩௩௪ |
| எஃகிடை | ௩௨ | பா. ௩௧ | ௧௭௨ |
| எல்லாவிஃ | ௬௧ | கு. ௨௫ | ௩௬௯ |
| எல்லாவிஃ | ௧௦௭ | மு. ௭ | ௬௮௬ |
| எழின்மருப் | ௧௩௮ | நெ. ௨௧ | ௮௫௫ |

| முதல் | கலி | திணை | பக்க |
|---|---|---|---|
| எறித்தரு | ௯ | பா. ௮ | ௫௬ |
| என்னோற்ற | ௯௪ | ம. ௨௯ | ௫௬ |
| ஏஎயிஃதொ | ௬௨ | கு. ௨௬ | ௩௭ |
| ஏந்தெழின் | ௯௬ | ம. ௩௧ | ௫௮ |
| ஒண்சுடர்கல் | ௧௨௧ | நெ. ௪ | ௭௬௦ |
| ஒருகுழை | ௨௬ | பா. ௨௫ | ௧௪௧ |
| ஒருஉக்கொ | ௮௮ | ம. ௨௩ | ௫௨ |
| ஒரூஉநீயெங் | ௮௭ | ம. ௨௨ | ௫௨ |
| ஒன்று,இரப் | ௪௭ | கு. ௧௧ | ௨௮ |
| கடிகொளிரு | ௧௧௦ | மு. ௧௦ | ௭௦௯ |
| கடும்புனல் | ௩௧ | பா. ௩௦ | ௧௬௭ |
| கண்டவரில் | ௧௨௫ | நெ. ௮ | ௭௭௮ |
| கண்டவிரெ | ௧௪௦ | நெ. ௨௩ | ௮௬ |
| கண்டேனின் | ௯௦ | ம. ௨௫ | ௫௩ |
| கண்ணகனி | ௧௦௨ | மு. ௨ | ௬௨ |
| கதிர்விரிகனை | ௪௪ | கு. ௮ | ௨௬ |
| கயமலருண் | ௩௭ | கு. ௧ | ௨௦௯ |
| கருங்கோட்டு | ௧௨௩ | நெ. ௬ | ௭௬௯ |
| கழுவொடுசுடு | ௧௦௬ | மு ௬ | ௬௭௭ |
| காமர்கடும் | ௩௯ | கு ௩ | ௨௧௫ |
| காராரப்பெய் | ௧௦௯ | மு ௯ | ௭௦௩ |
| கார்முற்றி | ௬௭ | ம ௨ | ௪௦௩ |
| காலவை, சுடு | ௮௫ | ம ௨௦ | ௫௦௪ |
| கொடியவுங் | ௫௪ | கு ௧௮ | ௩௨௪ |
| கொடுமிடலு | ௩௬ | பா ௩௫ | ௧௯௫ |
| கொடுவரி | ௪௯ | கு ௧௩ | ௨௯௯ |
| கோதையாய | ௧௨௨ | நெ ௫ | ௭௬௫ |
| சான்றவிர் | ௧௩௯ | நெ ௨௨ | ௮௬௨ |
| சுடர்த்தொடீ | ௫௧ | கு ௧௫ | ௩௦௯ |
| சுணங்கணி | ௬௦ | கு ௨௪ | ௩௬௨ |
| செருமிகுசின | ௧௩ | பா ௧௨ | ௮௨ |
| செவ்வியதீவி | ௧௯ | பா ௧௮ | ௧௧௨ |
| ஞாலம்வறந் | ௮௨ | ம ௧௭ | ௪௮௯ |
| ஞாலமூன் | ௧௨௪ | நெ ௭ | ௭௭௪ |
| தளிபெறுத | ௧௦௧ | மு ௧ | ௬௧௭ |
| தளைநெகிழ் | ௫௯ | கு ௨௩ | ௩௫௯ |
| திருந்திழாய் | ௬௫ | கு ௨௯ | ௩௯௧ |
| தீம்பால்கற | ௧௧௧ | மு ௧௧ | ௭௧௩ |
| துணைபுணர் | ௧௩௫ | நெ ௧௮ | ௮௩௭ |

## செய்யுண்முதலகராதியும் எண்களும்

| முதல் | கலி | திணை | பக்கம் |
|---|---|---|---|
| துணையுநர் | ௧௪௫ | நெ ௨௮ | ௯௧௮ |
| தெரியிணர் | ௧௨௭ | நெ ௧௦ | ௭௮௬ |
| தொடங்கற் | ௨ | பா ௧ | ௧௩ |
| தொல்லியன் | ௧௪௮ | நெ ௩௧ | ௯௪௯ |
| தொல்லூழி | ௧௨௯ | நெ ௧௨ | ௭௯௮ |
| தொல்லெழி | ௨௯ | பா ௨௮ | ௧௫௭ |
| தோடுறந்த | ௧௨௮ | நெ ௧௧ | ௭௯௨ |
| தோழிநாம் | ௧௧௫ | மு ௧௫ | ௭௩௨ |
| நடுவிகந்தொ | ௮ | பா ௭ | ௫௦ |
| நயந்தலை | ௮௦ | ம ௧௫ | ௪௭௧ |
| நயனும்வாய் | ௧௩௦ | நெ ௧௩ | ௮௦௪ |
| நலமிகநந்திய | ௧௧௩ | மு ௧௩ | ௭௨௨ |
| நறவினை | ௯௯ | ம ௩௪ | ௬௦௫ |
| நன்னுதால் | ௧௪௪ | நெ ௨௭ | ௯௦௬ |
| நிரைதிமில் | ௧௪௯ | நெ ௩௨ | ௯௫௩ |
| நில்லாங்கு | ௯௫ | ம ௩௦ | ௫௭௬ |
| நீரார்செறுவி | ௭௫ | ம ௧௦ | ௪௪௬ |
| நெஞ்சுநடுக் | ௨௪ | பா ௨௩ | ௧௩௨ |
| நோக்குங் | ௬௩ | கு ௨௭ | ௩௮௧ |
| படைபண்ணி | ௧௭ | பா ௧௬ | ௧௦௫ |
| பல்வளம் | ௨௦ | பா ௧௯ | ௧௧௫ |
| பன்மலர்ப் | ௭௮ | ம ௧௩ | ௪௬௨ |
| பாஅலஞ் | ௫ | பா ௪ | ௩௬ |
| பாங்கரும் | ௧௧௬ | மு ௧௬ | ௭௩௫ |
| பாடல்சால் | ௨௮ | பா ௨௭ | ௧௫௩ |
| பாடின்றிப் | ௧௬ | பா ௧௫ | ௯௧ |
| பாடுகம்வா | ௪௧ | கு ௫ | ௨௩௮ |
| பான்மருண் | ௨௧ | பா ௨௦ | ௧௧௯ |
| புரிவுண்ட | ௧௪௨ | நெ ௨௫ | ௮௮௦ |
| புள்ளிமிழக | ௭௯ | ம ௧௪ | ௪௬௭ |
| புனவளர்பூ | ௯௨ | ம ௨௭ | ௫௪௫ |
| புனையிழை | ௭௬ | ம ௧௧ | ௪௫௨ |
| பெருங்கடற் | ௧௩௧ | நெ ௧௪ | ௮௦௯ |
| பெருந்திரு | ௮௩ | ம ௧௮ | ௪௯௨ |
| பொதுமொ | ௬௮ | ம ௩ | ௪௦௯ |
| பொய்கைப் | ௭௪ | ம ௯ | ௪௪௨ |
| பொன்மலை | ௧௨௬ | நெ ௯ | ௭௮௨ |
| போதவிழ்ப | ௬௯ | ம ௪ | ௪௧௫ |
| மடியிலான் | ௩௫ | பா ௩௪ | ௧௯௦ |
| மணிநிற | ௭௦ | ம ௫ | ௪௨௧ |
| மரையாமரல் | ௬ | பா ௫ | ௪௨ |
| மலிதிரையூர் | ௧௦௪ | மு ௪ | ௬௪௯ |
| மல்லரைமற | ௧௩௪ | நெ ௧௭ | ௮௩௯ |
| மறங்கொளி | ௪௨ | கு ௬ | ௨௪௮ |
| மன்னுயிரே | ௩௪ | பா ௩௩ | ௧௮௪ |
| மாணவுருக்கி | ௧௧௭ | மு ௧௭ | ௭௩௮ |
| மாமலர்முண் | ௧௩௩ | நெ ௧௬ | ௮௨௫ |
| மின்னொளிர | ௫௫ | கு ௧௯ | ௩௨௯ |
| முறஞ்செவி | ௫௨ | கு ௧௬ | ௩௧௨ |
| மெல்லிணர் | ௧௦௩ | மு ௩ | ௬௩௫ |
| மைபடுசென் | ௮௬ | ம ௨௧ | ௫௧௧ |
| மையறவிளங் | ௮௧ | ம ௧௬ | ௪௭௬ |
| யாரிவனெங் | ௮௯ | ம ௨௪ | ௫௩௦ |
| யாரிவனென் | ௧௧௨ | மு ௧௨ | ௭௧௭ |
| யாரைநீயெம் | ௯௮ | ம ௩௩ | ௫௯௮ |
| வண்டூதுசாந் | ௯௩ | ம ௨௮ | ௫௫௭ |
| வயக்குறும | ௨௫ | பா ௨௪ | ௧௩௪ |
| வலிமுன்பின் | ௪ | பா ௩ | ௨௯ |
| வறனுறலறி | ௫௩ | கு ௧௭ | ௩௧௯ |
| வறியவனிள | ௧௦ | பா ௯ | ௬௨ |
| வாங்குகோ | ௫௦ | கு ௧௪ | ௩௦௨ |
| வாரிநெறிப் | ௧௧௪ | மு ௧௪ | ௭௨௭ |
| வாருறுவணை | ௫௮ | கு ௨௨ | ௩௫௨ |
| விடியல்வெங் | ௪௫ | கு ௯ | ௨௭௧ |
| விரிகதிர்மண் | ௭௧ | ம ௬ | ௪௨௭ |
| வீங்குநீரவிழ் | ௬௬ | ம ௧ | ௩௯௭ |
| வீயகம்புலம் | ௪௬ | கு ௧௦ | ௨௭௮ |
| வீறுசான் | ௩௩ | பா ௩௨ | ௧௭௭ |
| வெல்புகழ் | ௧௧௮ | நெ ௧ | ௭௪௫ |
| வேங்கை | ௪௩ | கு ௭ | ௨௫௭ |
| வேயெனத் | ௫௭ | கு ௨௧ | ௩௪௭ |
| வேனிலுழந் | ௭ | பா ௬ | ௪௫ |

உ

வருணன் துணை.

# கலித்தொகை

## மூலமும்

### நச்சினார்க்கினியருரையும்.

### ஐந்தாவது நெய்தற்கலி.



(௧௧௮.) வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தா
னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் தான்செய்த
தொல்வினைப் பயன்றுய்ப்பத் துறக்கம்வேட் டெழுந்தாற்போற்
பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர
௫ வானூது கனுழ்கொண்ட வுலகத்து மற்றவ
னோனையா னளிப்பான்போ லிகலிருண் மதிசீப்பக்
குடைநிழ லாண்டாற்கு மாளிய வருவாற்கு
மிடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருண்மாலை ;
௯ மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தவெ னெழினல மெள்ளுவா
யாய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட
காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய் ;
௧௩ மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
செவ்வழியாழ் நரம்பன்ன கிளவியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய் ;
௧௭ மாலைநீ, தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப்
பகைமிக்க நெஞ்சத்தேம் புன்மைபா ராட்டுவாய்

தகைமிக்க புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய் ;

எனவாங்கு;

௨௨ மாலையு மலருநோ னாதெம்வயி
னெஞ்சமு மெஞ்சுமற் றில்ல வெஞ்சி
யுள்ளா தமைந்தோ ருள்ளு
முள்ளி னுள்ள முள்ளு ளுவந்தே.

இது பிரிவிடையாற்றாத தலைவி மாலைப்பொழுது கண்டு அதனோடு புலம்பித் தோழிகேட்ப அதனோடு புலந்தது.

இதன் பொருள்.

(௧)வெல்புகழ் மன்னவன் விளங்கிய வொழுக்கத்தா
னல்லாற்றி னுயிர்காத்து நடுக்கறத் (௨)தான்செய்த
தொல்வினைப்*பயன் றுய்ப்பத் துறக்கம்வேட்†டெழுந்தாற்போற்
(௩)பல்கதிர் ஞாயிறு பகலாற்றி மலைசேர
வானாது ‡கலுழ்கொண்ட வுலகத்து மற்றவ
னேனையா னளிப்பான்போ லிகலிருண் ||மதிசேப்பக்

௧. (அ) "வென்றிப் பல்புகழ்" மலை. ௫௪௪ (ஆ) "மறம் வீங்கு பல்புகழ்" பதிற். ௧௨: ௮. என்பவைகளும் (இ) இந்நூற்பக்கம் ௧௪௫: ௪ - ஆம் குறிப்பும் ஒப்புநோக்குக.

௨. (அ) "அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார், சிறந்தோ ருலகம் படருநர் போல" பரி. ௧௧: ௧௦ - ௧௧. (ஆ) "விளைந்தார் வினையின் விழுப்பயன் றுய்க்குந், துளங்கா விழுச்சீர்த் துறக்கம்" பரி. 'வானோர்' ௪௬ - ௪௭. (இ) "புண்ணியம் புரிந்தோர் புகுவது துறக்க மென்னுமீ தருமறைப் பொருளே" (ஈ) "எண்ணிய வின்ப மன்றித் துன்பங்க ளில்லை யான, புண்ணியம் புரிந்தோர் வைகுந் துறக்கமே போன்ற தன்றே" (உ) "மாண்டதோர் நலத்திற் றூமென் றுணர்த்துதல் வாய்மைத் தன்றால், வேண்டிய வேண்டி னெய்தி வெறுப்பின்றி விழைந்த துய்க்கு, மீண்டரும் போக வின்ப மீறில தியாண்டுக் கண்டா, மாண்டது துறக்க மஃதே யருமறைத் துணிவு மம்மா" கம்ப. ஈகரப். ௫. சவரிபிறப்பு, ௧. கடவுள். ௧௪.

௩. "கல் சேர்ந் தன்றே பல்கதிர் ஞாயிறு" அகம். ௧௨௦: ௫.

(பிரதிபேதம்) * பயன்றுய்ப்பான், † உழந்தாற், ‡ கலிழ்கொண்ட, || மதிசேப்ப, மதி சிறப்ப.

குடைநிழ (௧)*லாண்டாற்கு மாளிய வருவாற்கு
மிடைநின்ற காலம்போ லிறுத்தந்த மருண்மாலை

எ - து: (௨)பகைவரிடத்துப் போர்த்தொழில்நிகழ்த்த வல்ல விளங்கிய ஒழுக்கத்தாலே வெல்கின்ற புகழையுடைய அரசன் நல்ல தருமநூனெறியாலே (௩) பல்லுயிர்களையும் பாதுகாத்துத் தீவினையால் உளதான நடுக்கம் மனத்திலில்லையாம்படி தான்செய்த பழவினையின்பயனை நுகர்தற்குச் சுவர்க்கத்தை விரும்பிப் போனாற்போல பலகதிரையுடைய (௪) ஞாயிறு தனக்குப் பகையாகிய இருளைக் கெடுத்து உலகத்திற்குப் பகற்பொழுதை முறைமையாற் செலுத்தி மலையிலே சென்று சேராநிற்க, அமையாதே கலக்கங்கொண்ட உலகத்தினிடத்தே பின்னை †அவ்வரசனுக்குப்பகைவனாகிய அரசன் வந்து அவ்வுலகைச் சிறிதே அளிப்பான்போல, தனக்கு மாறுபாட்டையுடைய இருளை மதி போக்காநிற்க, அந்தக்குடையால் நிழல்செய்து ஆண்ட அரசனுக்கும் அவ்வுலகை ஆளவரும் அரசனுக்கும் நடுவுநின்ற வருத்தந்தருகின்ற காலம்போல வந்துவிட்ட மாலாய்! நீ மருட்சியையுடைய மாலையாய் இருந்தாயென்றாள். எ - று.

௯ மாலைநீ, (௫)‡தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த
போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவா

---

௧. "புற்கென்றா ரந்தி புனைமலர்க்க ணீரரும்ப, நிற்கின்ற தந்தோ நிலங்காப்பான்-முற்கொண், டடைகின்ற வேந்தர்க்கு மாண்டஞ்சி னோர்க்கு, மிடைநின்ற காலம்போ லின்று" நள. சுயம்வர. ௪௦௦.

௨. "விரியிருட் பகையை யோட்டித் திசைகளை வென்று மேனின், றொருதனித் திகிரியுந்தி யுயர்புகழ் நிறுவி நாளு, மிருநிலத்தேவர்க்கு முள்ளத் திருந்தன னென்ன வீந்த, செருவலி வீர னென்னச் செங்கதிர்ச் செல்வன் சென்றான்" கம்ப. கங்கைப். ௪௭.

௩. "மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லென்ப, தன்னுயி ரஞ்சும் வினை" குறள். ௨௪௪.

௪. (அ) "விரிகதிர்பரப்பி........மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென...... ......அந்திவானத்து வெண்பிறை தோன்றிப், புன்கண்மாலைக் குறும்பெறிந்தோட்டி" சிலப். ௪: ௧ - ௨௦.

௫. (அ) "இனந்தூய்மை தூவா வரும்" (குறள். ௪௫௫.) என்பதன் விசேடவுரையில், தூவென்பது பற்றுக்கோடென்னும் பொருளில் வருதற்கு, 'தூவறத் துறந்தாரை' என்பதனை மேற்கோள் காட்டுவர், பரி. தாவென்பதன்றித் தூவென்பதும் வலியென்னும் பொருளில் வருமென்பதை, (ஆ) "தூவறுத்தலின்" மது. ௧௮௮. (இ) "தூவெதிர்ந்து" பதிற். அ: ௩௪. (ஈ) "தூவாகாது" (உ) "தூவறத் துறந்தனன்" (ஊ) "தூவற நீப்ப" கலி. ௬௭: ௨௦, ௧௨௯: ௯, ௧௪௯: ௧௯.

(பிரதிபேதம்) * ஆண்டோற்கும், ஆண்டார்க்கும். †அரசனுடையபகைவனாகிய. ‡தாவற.

யாய்சிறை வண்டார்ப்பச் சினைப்பூப்போற் றளைவிட்ட
(க)காதலர்ப் *புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்

எ - து: அதற்குக் காரணம் என்னெனில், நமக்கு வலியில்லையாம்படி நம்மைத் துறந்தவரை நினைக்கையினாலே (உ)கயங்கள்பூத்த போதுபோலே நின்னைக்கண்டு மனங்குவிந்த என்னுடைய அழகினையுடைய நலத்தை இகழ்கின்ற நீ அழகிய † சிறகினையுடைய வண்டுகள் ஆரவாரிக்கும்படி முறுக்கு நெகிழ்ந்த கோட்டுப்பூப்போலே மன ‡நெகிழ்ந்த காதலரைக் கூடியிருக்கின்ற மகளிருடைய அழகைப் போக்கமாட்டாயென்று அதன் மருட்சி கூறினாள். எ - று.

||இதனால், நீ வருந்தினவர்களை வருத்தியே விடுவையென்றும் × மகிழ்ந்தவர்களை மகிழப்பண்ணியே விடுவையென்றும் அதன் அருளின்மைநோக்கி மருட்சியையுடைய மாலையாய் இருந்தாயென்றாள்.

இறுத்தந்தமாலாய்! நீ மருண்மாலையாய் இருந்தாயென மேல்வரும் 'மாலைநீ' என்பனவற்றையும் இங்ஙனங்கூட்டிப் பொருள்கூறிக்கொள்க.

கரு. (ங)மாலைநீ, தையெனக் கோவலர் தனிக்குழ லிசைகேட்டுப்
பையென்ற நெஞ்சத்தேம் பக்கம்பா ராட்டுவாய்
(ச)செவ்வழியாழ் நரம்பன்ன =கிளவியார் பாராட்டும்
பொய்தீர்ந்த புணர்ச்சியுட் புதுநலங் கடிகல்லாய்

எ - து: கோவலருடைய தனித்தகுழலோசை தையென்னும் ஓசைப்பட ஒலிப்ப அதுகேட்டுக் குறைந்த நெஞ்சத்தை ÷யுடையேம் பக்கத்தேநின்று

என வருபவையும் வலியுறுத்தும். (எ) "தாவறத் துறத்தல்" கலி. கஉக: க-ஆம் அடிக்குறிப்புப் பார்க்க.

க. "தாழ்துணை துறந்தோர் தனித்துய ரெய்தக், காதலர்ப் புணர்ந்தோர் களிமகிழ் வெய்த,.........மாலைவந் திறுத்தென" சிலப். ச: கங - உ௦.

உ. (அ) "கோட்டுப்பூப் போல மலர்ந்துபிற் கூம்பாது, வேட்டதே வேட்டதா நட்பாட்சி - தோட்ட, கயப்பூப்போன் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை, நயப்பாரு நட்பாரு மில்" நாலடி. உகரு. (ஆ) "உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங், கூம்பலு மில்ல தறிவு" குறள். சஉரு. (இ) "நலமிக வுயர்ந்தோர் தம்மை நண்புறத் தழுவிக்கொள்க, நிலவிய கயத்துப் பூவை நிகர்தரா துயர்ந்த கோட்டி, னலரென வவர்பானிற்க வாக்கமிக் கடுத்த காலை, மலர்வதும் வறங்கூர் காலைக் கூம்பலு மொழிக மைந்தா" விநாயக. அரசியற்கை. ருக.

ங. ஞாயிறு முதலியன சொல்லுந போலவும் கேட்குந போலவும் சொல்லி யமையப் பெறுமென்புழி, கேட்குநபோலப் பொழுதொடு

(பிரதிபேதம்) * புணர்ந்தவர்க்காரிகை, † சிறையினையுடைய, ‡ நெகிழ்ந்து காதலரை, || இதனால் வருந்தின. × மகிழ்ந்தவரை, = கிளவியாய்ப் பாராட்டும், ÷ உடையேமுடைய பக்கத்தே.

உயிரைக்கொள்ளாதே விநோதித்துப் பாராட்டுகின்ற நீ தங்கணவர் பிரிந்த காலத்துச் (௧) செவ்வழியென்னும் பண்ணையுடைய யாழினது நரம்போசை போலவருந்திக்கூறும் மொழியினையுடையமகளிர் அக்கணவர் (?) *வருந்தின எம்போற் (௨) கனவிற் புணர்ச்சியின்றிப் பாராட்டப்படும் நனவிற்புணர்ச்சியிற் பெற்ற புதியநலத்தைக் கடியமாட்டாய். எ - று.

௧௭ மாலைநீ, †தகைமிக்க தாழ்சினைப் பதிசேர்ந்து புள்ளார்ப்பப்
‡பகைமிக்க நெஞ்சத்தேம் ||புன்மைபா ராட்டுவாய்
தகைமிக்க ÷புணர்ச்சியார் தாழ்கொடி நறுமுல்லை
முகைமுகந் திறந்தன்ன முறுவலுங் கடிகல்லாய்

எ - து: அழகு மிக்க தாழ்ந்த சினைகளில் தமக்கிருப்பிடத்தே (௩) பேடுஞ் சேவலுமாகச் சேர்ந்து பறவைகள் ஆரவாரியாநிற்க, மற்றுள்ள பகைகளாலும் வருத்தமிக்க நெஞ்சத்தினை ×யுடையேம் புன்மையையாங்கள் இறந்துபடாத படி பண்ணி விநோதித்துப் பாராட்டுகின்றநீ அழகு மிக்ககூட்டத்தையுடைய ┼ மகளிரது தாழ்ந்த கொடியினையுடைய நறிய முல்லையினுடைய முகையின் முகத்தை வண்டுகள் திறந்தாற்போல ஆடவரால் திறக்கப்படும் முறுவலையுங் கடியமாட்டாய். எ - று.

**எனவாங்கு அசை.

௨௨ ††மாலையு மலரு நோனா தெம்வயி
னெஞ்சமு மெஞ்சுமற் றில்ல வெஞ்சி
‡‡யுள்ளா தமைந்தோ ருள்ளு
முள்ளி லுள்ள முள்ளு ளுவந்தே

கூறியதற்கு, "மாலைநீ, தையெனக் கோவலர்........பக்கம்பா ராட்டுவாய்" என்பதுமேற்கோள்; தொல். செய். சூ. ௧௧௦. 'ஞாயிறு' இளம்.

௧. "நனவிற் புணர்ச்சி நடக்கலு மாங்கே, கனவிற் புணர்ச்சி கடிதுமா மன்றே" கலி. ௩௧: ௩௫ - ௩௬.

௨. (அ) "என் கிளவிபோற் செவ்வழி யாழிசை" கலி. ௧௪௩: ௩௮. (ஆ) "செவ்வழி நல்யா, ழிசையோர்த் தன்ன வின்றீங் கிளவி, யணங்குசா லரிவையை" அகம். ௨௧௨: ௭ - ௮.

௩. பேடென்பது பெண்பறவையென்னும் பொருளில் இவருரைகளிலும் கம்பர் வில்லிபுத்தூராழ்வார் குமாரகுருபர சுவாமிகள் சீகாழி அருணாசலக் கவிராயர் முதலியவர் செய்யுட்களிலும் வந்துள்ளது.

(பிரதிபேதம்) * வருந்தின் எம்போற். † தலைமிகத்தாழிசை, ‡ புரிமிக்க, || பன்மைபாராட்டுவாய், ÷ புணர்ச்சியாற்றாழ், புணர்ச்சியாய்தாழ், × உடையேமுடைய பன்மையை, ┼ மகளிருடைய தாழ்ந்த, ** ஆங்க. மாலை, †† மலையுமலரு, ‡‡ உள்ளஞ்சமைந்தோருள்ள முள்ளிலுள்ள.

எ - து: நம்மைப் பிரிந்து உள்ளில்லாத உள்ளத்தாலே நம்மை நினையாமல் அமைந்திருந்தோரை உள்ளே உள்ளே உவந்து உள்ளும் நம்முடைய நெஞ்சமும் இம் *மாலையையும் ஊரார் கூறும் அலரையும் பொருதே நம்மை விட்டுப் போகாநின்றது; இனி என்செய்வேமென வருந்திக் கூறினள். எ-று

இதனால், தலைவிக்கு இழிவு பிறந்தது.

இது "நடைநவின் றொழுகு மாங்கென் கிளவி" (க)என்ற இலக்கணஞ் சிதைய இடையிடை சொற்சீரடி வருதலின் ஒத்தாழிசையாகாது எண்ணிடையிட்டுச் சின்னங்குன்றிய(உ)கொச்சகமாயிற்று.

இது முதலிய மூன்றுபாட்டும் (ங)மாலைக்காலத்தைக்கூறினமையின் "காரு மாலையுமுல்லை" என்னும் (ச) பொதுவிதிபற்றி முல்லையுட் கோத்தல்வேண்டுமெனின், அது பெரும்பான்மைபற்றிக்கூறியது; மாலை எற்பாட்டின் பின் நிகழுங் காலமாதலின் அதற்கியைபுபட்டு நெய்தற்கும் உரித்தாயிற்று. அது

---

க. தொல். செய். சூ. கடுரு.

உ. (அ) இச்செய்யுளை 'தாழிசைதோறும் தனிச்சொற்பெற்றுவந்த நேரிசையொத்தாழிசைக்கலிப்பா' என்றுகூறி, "வெல்புகழ்...............மருண்மாலை" இது தரவு "மாலைநீ, தூவறத்.........காரிகை கடிகல்லாய்" "மாலைநீ, தையெனக்.........புதுநலங் கடிகல்லாய்" "மாலைநீ, தகைமிக்க.........முறுவலுங்கடிகல்லாய்" இவை மூன்றுந்தாழிசை. ஆங்க-தனிச்சொல் "மாலையு...........ளுவந்தே" இது சுரிதகம் என்று விளக்கினர் இளம்; (தொல். செய். சூ. கடுக. 'போக்கியல்') பேராசிரியர்க்கும் நச்சினார்க்கினியர்க்கும்இது உடம்பாடன்றென்பது.(ஆ)பேராசிரியர் இச்செய்யுள் தரவுந் தாழிசையும் போக்கும் முறையானே வந்தாயினும் 'இடைநிலைக்கிளவி தாழிசைப்பின்னர், நடைநவின்றொழுகு மாங்கென் கிளவி' (தொல். செய். சூ. கடுரு.) என்னும் இலக்கணஞ் சிதைய[ாத் தரவிறுதியினுந்] தாழிசை[யிறுதி]கடோறுஞ் சொற்சீர்பல வருதலான் ஒத்தாழிசையெனப்படாது அதன்வகைத்தாய் எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றியதாஉ(கொச்சக)மாயிற் றென்பதாலும் நச்சினார்க்கினியர் அதனையே தழுவி, "இது 'நடைநவின் றொழுகு மாங்கென் கிளவி' என்னும் இலக்கணஞ் சிதைய இடையிடை சொற்சீரடி பலவருதலின் ஒத்தாழிசையாகாது எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றிய கொச்சகமாயிற்று" என்று எழுதுவதாலும்விளங்கும். தொல். செய். சூ. கடுரு.

ங. "கலியுள், மாலைக்காலம் செய்தலின்கண் வந்தது"; தொல். அகத். சூ. அ. நச்.

ச. தொல். அகத். சூ. ரு.

(பிரதிபேதம்) * மாலையுமிவ்வூரார் கூறும்.

"திணைமயங்குறுதலும்" என்னும் (க) சூத்திரத்து "நிலனொருங்குமயங்குத *லின்று" என்றதனாற் காலமொருங்கு மயங்குமென்றது கொண்டு சான்றோர் பலருஞ் செய்யுள்செய்தார். "கானன் மாலைக் கழிப்பூக் †கூம்ப" என்னும் (உ)அகப்பாட்டும் நெய்தற்கண் மாலைவந்தது. "தொல்லூழிதடுமாறி" என்னும் (ங) நெய்தற்கலியுட் கங்குலும் மாலையும் முன்பனியும் வந்தவாறுகாண்க. இந்நிலத்து மாலைவந்த பாட்டுக்கள் ‡பலவுமுள. பிற சான்றோர்செய்யுட்களுட் காலம் மயங்குமாறு பலவுங் கண்டுகொள்க. (க)

(கககூ.) அகன்ஞாலம் விளக்குந்தன் (ச)பல்கதிர் வாயாகப்
பகனுங்கி யதுபோலப் (ரு)படுசுடர் கல்சேர
விகன்மிகு நேமியா னிறம்போல ||விருளிவர
(சூ)நிலவுக்காண் பதுபோல வணி× மதி யேர்தரக்
ரு கண்(எ)பாயல் பெற்றபோற் (அ)கணைக்÷கால மலர்கூம்பத்
(கூ)தம் ✝புகழ் கேட்டார்போற் றலைசாய்த்து மரந்துஞ்ச

---

க. தொல். அகத். சூ. கஉ.

உ. அகம். ௬0.

ங. கலி. கஉக.

ச. "பல்கதிர் மண்டிலங் கல்சேர்பு மறைய" குறிஞ்சி. உககூ.

ரு. "ஒண்சுடர் கல்சேர" கலி. கஉக: க.

சூ. பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி முன்னத்தான் உவமை கூறு தற்கு இவ்வடியை மேற்கோள்காட்டி, இது காணப் பிறிதாகிய பொருளோடு உவமை கூறுமையிற் பிறிதொடுபடாதாயிற் றென்றும், மதியினதெழுச்சியை நோக்குதலிற் பிறப்பொடுநோக்கிற்றென்றும் கூறுவர், இளம்; தொல். உவமை. சூ. உங. 'பிறிதொடு'

எ. "பாயல்கொள் பவைபோலக் கயமலர் வாய்கூம்ப" கலி. கஙச: அ.

அ. கணைக்காலென்பது, நீர்ப்பூக்களுள் நற். உங0,ஐங்.கூஅ; ஆம்பலுக்கும், நற். உகூஉ, குவளைக்கும், நற். கஙஅ, குறுந். கூ. நெய்தலுக்கும் வருதலோடு திணைமொழி. ஙஉ - இல் மருதுக்கும் அடையாக வந்துள்ளது.

கூ. (அ) "சான்றோர், புகழு முன்னர் நாணுப" குறுந். உருஉ. (ஆ) "கோவெனப் பெயரிய காலை யாங்கது, தன்பெயராகலி னாணி" (இ) "பரந்தோ ரெல்லாம் புகழத் தலைபணிந், திறைஞ்சியோனே" புறம். கருஉ: உக-உஉ, உஅரு: கங -கச. (ஈ) "பிறர் தன்னைப் பேணுங்கா னாணலும் ............ஊராண்மை யென்னுஞ் செருக்கு" திரிகடுகம். கூ.

(பிரதிபேதம்) * இலவென்றதனால், †கூம்பும், கம்பும். ‡பலவுமுளவென்றுணர்க. பிறசான், || இருள்வர, × மதிபோதரக், ÷ காலவலர், காலலர், ✝புகழக்கேட்டார்,

முறுவல்*கொள் பவைபோல முகையவிழ்பு புதனந்தச்
சிறு (௧)வெதிர்ங் குழல்போலச் சுரும்பிமிர்ந் (௨)திம்மெனப்
(௩)பறவைதம் பார்ப்புள்ளக் (௪)கறவைதம் பதிவயிற்
கன்றமர் விருப்பொடு மன்றுநிறை புகுதர
மாவதி சேர மாலை வாள்கொளா
(௫)வந்தி யந்தண ரெதிர்கொள வயர்ந்து
செந்தீச் செவ்வழ †றொடங்க வந்தனை
(௬)வாலிழை மகளி ‡ருயிர்பொதி யவிழ்க்குங்

---

௧. "ஆரும் வெதிரும்...............மெல்லெழுத்து மிகுதன் மெய்பெறத் தோன்றும்" (தொல். புள்ளிமயங். சூ. ௬௮.) என்பதனால். வெதிர்ங் குழலென வந்தது.

௨. "இம்மென" கலி. ௩௬: ௫; ௧௨௩: ௩.

௩. பார்ப்பென்பது பறவையின் இளமைப் பெயராய் வருதற்கு, "பறவை தம்பார்ப்புள்ள" என்பது மேற்கோள்; தொல். மரபி. சூ. ௪. 'பார்ப்பும்' இளம். இச்சொல் பார்வலெனவும் வழங்கும்.

௪. (அ) "ஆன் கணங், கன்றுபயிர் குரல மன்று நிறைபுகுதர" குறிஞ்சி. ௨௧௭ - ௨௧௮. (ஆ) "மதவுநடை நல்லான், வீங்குமாண் செருத்த தீம்பால் பிலிற்றக், கன்றுபயிர் குரல மன்றுநிறை புகுதரு, மாலையும்" அகம். ௧௪: ௬ - ௧௨. (இ) "சேதா, முலைபொழி தீம்பாலெழுதுக ளவிப்பக், கன்று நினைகுரலமன்றுவழிப்படர" மணி. ௫: ௧௩௦ - ௧௩௨. (ஈ) "கறவை கன்று வயிற்படர" குறுந். ௧௦௮.

௫. (அ) "அந்தியந்தண ரயர" குறிஞ்சி. ௨௨௫. (ஆ) "அந்தி யந்தணர் செந்தீப்பேண்" மணி. ௫: ௧௩௩. (இ) "சுருதி யந்தணர் யாவருந் தங்கடன் கழிப்பச், சுருதியென்னும் வெஞ் சாபமே லம்புகை தொடுத்துப், பருதி தன்பெரும் பகைவர்மேல் விடுத்தலிற் பரந்த, குருதி யாமென சிவந்தெழச் சிவந்தது குடபால்" வில்லி. கிருட்டினன்றூது ௮௬. (ஈ) "(மறையவன்) வாம்பரித் தடந்தேர்ப் பரிதிவா னவன்போய் மறிதிரைக் குடகடல் குளிப்ப, வாம்பல்வா யவிழு மாலையங் காலந் தந்திவந்தனைத்தொழின் முடித்துத், தீம்புனற் றுறைநின் றகன்று" **பிரமோத்தர**. உமாமகேசுவரபூசை. ௭.

௬. "மாலையோவல்லை" என்னுங் குறளின் விசேடவுரையில் "வாலிழை மகளிருயிர்பொதி யவிழ்க்குங், காலை" என்றூற்போல ஈண்டுப் பொதுமையாற் கூறப்பட்டதென்பர் பரி; குறள். ௧௨௨௧.

(பிரதிபேதம்) * கொள்பவர்போல, †துடங்க, ‡ உயிர்ப்பொதி.

கறி காலை யாவ தறியார்
(க)மாலை (உ)யென்மனார் மயங்கி யோரே.

**இது பிரிவிடை மாலைப்பொழுது கண்டு ஆற்றாத தலைவி தோழிக்கு உரைத்தது.**

---

க. மன் அசைநிலைக்கண் வந்ததற்கு, "மாலை யென்மனார் மயங்கியோரே" என்பது மேற்கோள்; நன். இடை. சூ. கஅ. மயிலை. இவ்வடியே குறுந். உ௩௪ - ஆம் செய்யுளிலும் மூன்றாம் அடியாக வந்துள்ளது.

உ. (அ) என்மனா ரென்பது, இடைச்சொல் தான்சாரப்படுஞ் சொல் லிற்கு வேறாய் வருதலே யன்றி அதற்கு உறுப்பாயும் வருமென்ப தற்கு மேற்கோள்; தொல். இடை. சூ க. சே. (ஆ) "என்மனா ரென்பது செய்யுண் முடிபெய்தி நின்றதோ ராரீற்று எதிர்கால முற்றுச்சொல்,................................என்ப என்னு முற்றுச் சொல்லினது பகரங் குறைத்து மன்னும் ஆருமென இரண் டிடைச்சொற்பெய்து விரித்தாரென்று உரையாசிரியர் கூறினரா லெனின்;-என்மனாரென்பது இடர்ப்பட்டுழிச் சிறுபான்மை வாராது, நூலுள்ளும் சான்றோர் செய்யுளுள்ளும் பயின்று வருதலானும், இசை நிறையென்பது மறுத்துப் பொருள் கூறுகின்றார் பின்னும் இசை நிறையென்றல்மேற்கோண்மலைவாதலானும் அவர்க்கு அதுகருத்தன் றென்க. மாணாக்கர்க்கு உணர்வு பெருகல் வேண்டி வெளிப்படக் கூறாது உய்த்துணரவைத்தல் அவர்க்கு இயல்பாகலாற் செய்யுண்முடி பென்பது கூறாராயினர்" (தொல். கிளவி. சூ. க.) என்றும் (இ) இதனை வினைத்திரிசொல் லென்பாருமுள ரென்றும். (தொல். எச்ச. சூ. க.) கூறுவர் சேனாவரையர்; (ஈ) "என்பவென்னு முற்றுச்சொல் 'குறைக்கும்வழிக் குறைத்தலும்' என்பதனாற் பகரங்குறைத்து, 'விரிக்கும்வழி விரித்தல்' என்பதனால் 'மன்' 'ஆர்' என்பன இரண் டிடைச்சொற் பெய்து விரித்து, என்மனா ரென்றாயிற்று" என்று (இறை. சூ. க.) இறையனா ரகப்பொரு ளுரைகாரரும் (தொல். கிளவி. சூ. க) கல்லாடனாரும் (உ) என்பவென்னுமொழி, ஈற்றுப் பகரங்கெட்டு மன் ஆரென்னும் இடைச்சொற்களைப்பெற்று என்மனா ரென முடிந்ததென்று (யா - வி. சூ. உ௬.) யா - வி. உரைகாரரும் உரையாசிரியரெனப் பேர்பெற்ற இளம்பூரணர் கொள்கையையே பின்பற்றுவர்; (ஊ) "என்மனாரென்பது செய்யுண்முடி பாயதோ ராரீற்று முற்றுச்சொல்; மன் எதிர்காலவிடைநிலை. அது 'உயர்திணை யென்மனார் மக்கட்சுட்டே' என்னுஞ் சூத்திரத்துச் சேனாவரைய ருரையானுமறிக" என்று கூறுவர் சிவஞானமுனிவர்; சிவஞான போத மாபாடியம். சூ. க. உரை.

## இதன் பொருள்.

அகன்ற (க)உலகத்தை எவ்வுயிர்க்குந் தோற்றுவிக்கும் தன்னுடைய பல கிரணங்களைத் தனக்கு வாயாகக்கொண்டு (உ)கான்ற பகற்காலத்தை மீண்டும் அவ்வாயாலே விழுங்கினாற்போல அவற்றைச் சுருக்கிக்கொண்டு படுகின்ற சுடர் அத்தகிரியைச் சேர்கையினாலே போரின்கண் மிகுகின்றசக்கரப்படையை யுடைய மாயோனிறம்போல இயல்பாகவுள்ள இருள் பரந்துவாராநிற்க, அதனைப் பொறாதே தன் நிலவாலே ஓட்டிப் புறங்காண்பாரைப்போலே அழ கினையுடைய மதி தோன்ற, கணவரைக் கூடித் துயிலைப்பெற்ற கண்கள் போலே திரண்ட தண்டுகளையுடையவாகிய தாமரை (ங) முதலியன குவிய, தம்புகழ்களைக் கேட்ட சான்றோரைப்போலே தலையைச் சாய்த்து மரங்கள் துயில, சிறுதூறுகள் பிரிந்த மகளிரை (௪)இகழ்ந்து சிரிப்பவைபோலே முகை கள் அவிழ்ந்து விளங்க, சிறிய மூங்கிலாகிய குழல்போலச் சுரும்புகள் ஆர்ப் பரவஞ்செய்து பாட, புட்கள் தம் பார்ப்புக்களை நினைத்துக் குடம்பையைச் சேரப், பசுக்கள் தாந் தங்கும் ஊர்களிடத்திற் கன்றின்மேல் அமர்ந்த விருப்பத் தோடே மன்றுக ணிறையப் புகுதலைச்செய்ய, மாக்கள் தாந் தங்குமிடத்தே சென்று தங்க, அந்தணர் தாஞ் செய்யுந் தொழில்களைச் செய்து அந்திக் காலத்தை எதிர்கொள்ள, (ரு)மகளிர் செந்தீயால் உண்டான விளக்கை ஏற்றத் தொடங்க, மாலை விளக்கங்கொள்ள வந்ததனை அறிவுகெட்டோர் வாலிய இழையினையுடைய மகளிருயிரை அதனைப் பொதிந்துநின்ற உடலினின்றும்

---

க. "இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும் வானிரவி யெழுந்தா லன்றிக், கருதுநிலப்பல்பொருளுங் காண்டலரிதாம்" திருக்குற்றலப். நூற்பயன். க.

உ. (அ)"வெயில்கான் றிருள்சீத் தெழுவெங்கதிர்ச் செல்வன் மைந்தன்" கூர்ம. இராவணவதை. கஎ. (ஆ) "பாயிருள் பருகுபு பகலைக்கான் றெழுங், காயெரிக் கதிரவன்" திருவானைக்கா. தீர்த்தவிசேடப். ௬௬.

ங. முதலியனவென்றது, குவளை நெய்தல்களை; இவை காலை மலர்ந்து மாலைக் குவிவனவென்றே பண்டைநூல்கள் கூறுகின்றன; இதற்கு மாறாக, குவளை மாலை மலர்ந்து காலைக் குவியுமென்று பிற்காலத்து நூல்கள் கூறுகின்றன. இவற்றின் உண்மை நோக்கி அறியத்தக்கது. "முல்லைத், தொகுமுகை யிலங்கெயி றாக, நகுமே தோழி" குறுந். கஉ௬.

௫. (அ) "வளமனைப், பூந்தொடி மகளிர் சுடர்தலைக் கொளுவி, யந்தி யந்தண ரயர" குறிஞ்சி. உஉங - உஉ௫. (ஆ) "உள்ளினே னல்லனோ யானே யுள்ளிய, வினைமுடித் தன்ன வினியோண், மனைமாண் சுட ரொடு படர்பொழு தெனவே" நற். ங: எ - ௬. (இ) "எல்வளை மகளிர் மணிவிளக் கெடுப்ப, மல்லன் மூதூர் மாலைவந் திறுத்தென" சிலப். ௪: கக - உ0.

போக்குங் காலத்தினது இயல்பாவதறியாராய் மாலைக்காலமென்று அதுவும் ஒருகாலமாகக் கூறுகிற்பரென ஆற்றாளாய்த் தோழிக்குக் கூறினாள். எ - று.

கல்சேர்கையினாலே * இருள் இவராநிற்க † அதுபொருது மதிதோன்ற என ஒருவினையாகமுடிக்க. "பகல்கான் றெழுதரும் பல்கதிர்ப் ‡ பருதி" (க) என்றார் பிறரும்.

|| மதியேர்தர என்பது முதலிய செயவெனெச்சங்களெல்லாம் நிகழ்கால முணர்த்திநின்று ÷ மாலைவாள்கொள[ா] என்னுஞ்செய[யா]வெனெச்சத்தோடு முடிந்தன. அது பின் வந்ததை என்னுந் தொழிற்பெயர்த்திரிசொல்லோடு முடிந்தது.

மயங்கியோர் என்றது தோழியைக்கருதி. × "திணைமயங்குறுதலும்"(உ) என்றதனாற் கருப்பொருண்மயங்குதலும் அமைத்தாம்.

இனி மாலை ╋ வாழ்கொளவென்று பாடமாயின் அப்பாடத்திற்கு, மாலை தான் வாழ்தல்கொள்ள வந்ததனை என்க.

** அளறுடங்க என்பதும் பாடம்.

இதனால், தலைவிக்கு இழிவுபிறந்தது.

இஃது அடக்கியலின்றி அடிநிமிர்ந்தோடிய கொச்சகவொருபோகின் பகுதியாய்த் தனிச்சொல்லும் அடக்கியலுமின்றிச் சுரிதகம் பெற்று அடிநிமிர்ந்தோடிய †† அகநிலைக்கொச்சகம். (உ)

(கஉ0.) அருளற்ற காட்சியா னறனோக்கா னயஞ்செய்யான்
வெருவுற வுய்த்தவ னெஞ்சம்போற் பைபய
விருடேர்பு புலம்பூரக் கனைசுடர் கல்சேர
வுரவுத்தகை மழுங்கித்தன் னிடும்மையா லொருவனை
ரு யிரப்பவ னெஞ்சம்போற் புல்லென்று புறமாறிக்
கரப்பவ னெஞ்சம்போன் மரமெல்லா மிலைகூம்பத்
தோற்றஞ்சால் செக்கருட் பிறைநுதி யெயிறாக
நாற்றிசையு நடுக்குறூஉ மடங்கற் காலைக்
கூற்றுநக் கதுபோலு முட்குவரு கடுமாலை;

க. பெரும்பாண். உ.

உ. தொல். அகத். சூ. கஉ.

(பிரதிபேதம்) * இருள்வாராநிற்க, † அது பொருமதி, ‡ பரிதி. || மதியோதர, ÷ மாலை வாள்கொளா வென்னுஞ் செய்யாவென்னு மெச்சத். × திணைமயக்குறுதலும் என்பதனாற் றரும்பொருண், ╋ வாழ்கொளவென்ற பாடத்திற்கு மாலைதான் வாழ்தல், ** அழறுடங்க. †† வகைநிலைக்.

மாலைநீ,உள்ளங்கொண்டகன்றவர் துணைதாராப்பொழுதின்கண்
வெள்ளமா னிறநோக்கிக் கணைதொடுக்குங் கொடியான்போ
லல்லற்பட் டிருந்தாரை யயர்ப்பிய வந்தாயோ ;

மாலைநீ, ஈரமில் காதல ரிகந்தருளா விடனோக்கிப்
போர்தொலைந் திருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போ
லாரஞ ருற்றுரை யணங்கிய வந்தாயோ ;

மாலைநீ, கந்தாதல் சான்றவர் களைதாராப் பொழுதின்கண்
வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்போற்
காய்ந்தநோ யுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ;

எனவாங்கு;

இடனின் றலைத்தரு மின்னுசெய் மாலை
துனிகொ டியர்தீரக் காதலர் துணைதர
மெல்லியான் பருவத்து மேனின்ற கடும்பகை
யொல்லென நீக்கி யொருவாது காத்தோம்பு
நல்லிறை தோன்றக் கெட்டாங்
கில்லா கின்று விருளகத் தொளித்தே.

இது பிரிவிடையாற்றாத தலைவி மாலைப்பொழுதுகண்டு கழிய ஆற்றளாயின இடத்துத் தலைவன்வரவும் அவளது அகமலர்ச்சியுங் கண்டார் கூறியது.

இதன் பொருள்.

அருமூர்ந்த காட்சியா னறனோக்கா * னயஞ்செய்யான்
வெருவுற வுய்த்தவ னெஞ்சம்போற் பைபய
விருடேர்பு புலம்பூரக் (க)கனைசுடர் கல்சேர
வுரவுத்தகை (உ)மழுங்கித்தன் னிடும்பையா லொருவனை
யிரப்பவ னெஞ்சம்போற் புல்லென்று புறமாறிக்
கரப்பவ னெஞ்சம்போன் மரமெல்லா மிலைகூம்பத்

(அ) "கனைசுடர் கல்சேர்பு மறைய" அகம். எஎ: கூ. (ஆ) "படுசுடர் கல்சேர" (இ) "ஒண்சுடர் கல்சேர" (ஈ) "கல்சேர்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்" கலி. கககூ: உ, கஉக: க, கஙஎ: அ.

உ. மழுங்க லென்பது 'மழுகல்' எனவும் 'மாழ்கல்' எனவும் வழங்கும். (பிரதிபேதம்) * அறஞ்செய்யான், பயஞ்செய்யான்.

தோற்றஞ்சால் செக்கருட் (௧)பிறைநுதி யெயிறாக
நாற்றிசையு நடுக்குறூஉ மடங்கற் காலைக்
கூற்றுநக் கதுபோலு முட்குவரு கடுமாலை

௭ - து: (௨)அருள் ஒருகாலத்தும் இல்லையான அறிவாலே (௩) அறஞ்செய்தல் இருமைக்கும் பயன்றருமென்று கருதானும், பண்புஞ்செய்யானும், எல்லாரும்வெருவுதலுறும்படி தனக்குள்ளநாளைப் பயன்படாமற்செலுத்தினவனுடைய நெஞ்சின் மருட்சிபோலே, மெத்தென மெத்தென இருளாலே உலகம் நிறைந்து கணவரைப் பிரிந்தோர்க்குத் தனிமைமேலிடும்படி செறிந்த சுடரையுடைய ஞாயிறு *அத்தகிரியைச்சேர, மிடியாலே இரத்தற்கஞ்சினவன் வலியின்றகைமை கெட்டுச்சென்று ஒருவனை வேண்டுகின்றவனுடையநெஞ்சுபோலே, மரமெல்லாம் முதற் பொலிவழிந்து, பின்பு அம்மரமெல்லாம் இரப்பாரைக்கண்டுஇருந்தவிடத்தினின்றும் எழுந்திருந்துபோய் மறைகின்றவனெஞ்சு கண்ணோடாதுகுவியுமாறுபோல,இலைகளெல்லாங் குவிய வருகின்ற மாலாய்! நீதான் நாலுதிக்குஞ் சேர நடுக்கமுறும் ஊழிமுடிவாகிய காலத்திலே கூற்றுவன் விளக்கம் அமைந்த செக்கர்வானிடத்துத் தோன்றின் நுதியையுடைய பிறை தனக்கு எயிறாகக்கொண்டு(௪)பல்லுயிரையுஞ் சேரக்கோடற்கு நக்காற்போலும் உட்குதலையுடைய கடியமாலையா யிருந்தாய். ௭ - று.

---

௧. (அ) "ஒன்றேயெயிற்ற தொருபெரும்பே யுலகம் விழுங்க வங்காந்து, நின்றாற்போல நிழலுமிழ்ந்து நெடுவெண்டிங்க ளெயிறிலங்க, வின்றே குருதி வானவா யங்காந் தென்னை விழுங்குவா, னன்றே வந்த திம்மாலை யளியே னாவி யாதாங்கொல்" சீவக. ௧௬௬௦. (ஆ) "விரிமலர்த் தென்றலாம் வீசுபாசமு, மெரிநிறச் செக்கரு மிருளுங் காட்டலா, லரியவட் கனறரு மந்தி மாலையாங், கருநிறச் செம்மயிர்க் காலன் றோன்றினான்" கம்ப. மிதிலைக்காட்சிப். ௬௨. (இ) "கூற்றங் கரந்து கொடியபுன் மாலை வடிவுகொண்டு, தோற்றுஞ் சிறுபிறை யேயெயி றாகத் துறையிருந்து, தேற்றந் தரும்பெடை யன்னமுஞ் சேவலுஞ் சேக்கைபுகு, மாற்றுந் திறமறி யேனவ ரோசென் றகன்றனரே" அம்பிகாபதிகோவை. ௧௬௬.

௨. (அ) "மெல்லெ, னருளிற் பிறக்கு மறநெறி" நான்மணி. ௭. (ஆ) "அறனு, மருளுடையான் கண்ணதே யாகும்" சிறுபஞ்ச. ௩.

௩. (அ) "தருமமென் றொருபொரு ளுளது தாவிலா, விருமையி னின்பமு மெளிதி னாக்குமால்" கந்த.........(ஆ) "அறமே, யிருமை யுந்துணை யாகுவ தன்றிமற் றில்லை"

௪. (அ) "மன்னுயிர்ப் பன்மையுங் கூற்றத் தொருமையு, நின்னொடு தூக்கிய" புறம். ௧௬: ௩ - ௪. (ஆ) எருமைக் கடும்பரி யூர்வோ னுயிர்த் தொகை, யொருபக லெல்லையி னுண்ணு மென்ப, தாரிய வாச

(பிரதிபேதம்) * அத்தமகிரியை.

முன்னர் நின்றமாலை உட்குதலையுடைய மாலையெனப் பின்னர் வந்த மாலை விசேடித்துநின்றது.

க௦ மாலைநீ, உள்ளங்கொண்டகன்றவர் துணைதாராப்பொழுதின்கண்
வெள்ளமா (க)னிறநோக்கிக் கணைதொடுக்குங் கொடியான்போ
லல்லற்பட் டிருந்தாரை யயர்ப்பிய வந்தாயோ

எ - து: இங்ஙனங் கடிய நீ என்னெஞ்சத்தைத் தம்மிடத்தே கொண்டு நீங்கினவர் எனக்குத் துணையாந்தன்மையைத் தாராத காலத்திலே வெள்ளத்திலே அகப்பட்டுக் கரையேற மாட்டாத மானினது மருமத்தைப் பார்த்து அம்பைத் தொடுக்குங் கொடியவனைப்போல அல்லலிலே அழுந்தியிருந்த என்னைக் கையறவெய்துவிக்க வந்தாயோ? எ - று.

மாலை நீ என வருகின்றவற்றையும் தரவொடு கூட்டி முற் கூறியவாறே பொருளுரைக்க.

கரு. மாலைநீ, ஈரமில் காதல ரிகந்தருளா (உ)விடனோக்கிப்
(ந)போர்(ச)தொலைந் திருந்தாரைப் பாடெள்ளி நகுவார்போ
லாரஞ ருற்றாரை யணங்கிய வந்தாயோ

எ - து: இங்ஙனங் கடிய நீ அருளில்லாத காதலர் விட்டுநீங்கி அருளாதிருந்த காலத்தைப் பார்த்துப் (ரு) போரிலே தோற்றிருந்தவர்களை அவர்கள் பட்ட தோல்வியை இகழ்ந்து சிரிப்பாரைப்போலே பொறுத்தற்கரிய வருத்தமுற்ற என்னை வருத்துவிக்கவந்தாயோ? எ - று.

---

ரமர்க்களத் தறிய, நூழி லாட்டிய சூழ்கழல் வேந்தன்" சிலப்: உசு: உகரு - உகஅ.

க. (அ) "சிலைமாண் கடுவிசை கலைநிறத் தழுத்தி" (ஆ) "வரிமர றேன் ஞாண் வன்சிலைக் கொளீஇ, யருநிறத் தழுத்திய வம்பினர் பலருட, னண்ணல் யானை வெண்கோடு கொண்டு" (இ) "வெள்வேல், வாத னெழினி யருநிறத் தழுத்திய, பெருங்களிற் றெவ்வம் போல" என்பவையும் இந்நூற்பக்கம் நகஜ: க - ஆம் குறிப்பும் பார்க்க.

உ. இடன் - காலம். கலி. கஉக: உந.

ந. "போர்...........வந்தாயோ" என்பது செய்கை யல்லாத மாலைப் பொழுதினைச் செய்யாமரபிற் றொழிற்படுத்தடக்கி உவமவாயிற்படுத்த தென்பர். நச்; தொல். பொருளி. சூ. உ.

ச. "ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும், புதுவ தன்று" புறம். எசு: ந - உ.

ரு. (அ) "தனக்கிரங் தானைப் பெயர்புற நகுமே" புறம். உஅச: அ; (ஆ) "வானக மண்ணு மெல்லா நகுநெடு வயிபத் தோளா, ஞனகும்

(பிரதிபேதம்) * மாலையை விசேடித்து.

போர்தொலைந்திருந்தார், தொழிலின்றெழில் தொழிலுடையதன்மேல் நின்றது.

௧௬ (க)மாலைநீ, தந்தாதல் சான்றவர் களைதாராப் பொழுதின்கண்
(உ) வெந்ததோர் புண்ணின்கண் வேல்கொண்டு நுழைப்பான்
காய்ந்தநோ யுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ [போற்

எ - து: இங்ஙனங் *கடிய நீ எனக்குப் பற்றுக்கோடாதலை அமைந்தவர் என் வருத்தத்தைப் போக்குதலைச்செய்யாத காலத்தே முன்பேவெந்ததொரு புண்ணிலே பின்பு ஒருவேலைக்கொண்டு சொருகுவாரைப்போலே மெய் வெதும்புதற்குக் காரணமான காமநோயிலே அழுந்துகின்ற என்னையுள்ளிட்ட அறிவையுங் கலங்குவிக்க வந்தாயோ? எ - று.

† எனவாங்கு

எ - து: என்று அவள் கூறும்படியாக. எ - று.

ஆங்கு, அசை.

௨0 இடனின் றலைத்தரு மின்னுசெய் மாலை
துனிகொ டுபர்தீரக் காதலர் துனைதர
(௩) மெல்லியான் பருவத்து மேனின்ற கடும்பகை
யொல்லென நீக்கி யொருவாது ‡ காத்தோம்பு
நல்லிறை தோன்றக் கெட்டாங்
கில்லா கின்று விருளகத் தொளித்தே

---

பகைவ ரெல்லா நகுவரென் றதற்கு நாணுன்" கம்ப. கும்ப. ௧௧. (இ) "முன்னை வைகலின் முரிந்தன னென்றே, பன்னு மோர்வசை பரந்ததுமன்றிப், பின்னு மிப்பகல் பிழைத்தன னென்று, லென்னை யாவர்களு மெள்ளுவர் மாதோ" கந்த. மூன்றுநாட்பானு. ௧௭௮.

௧. பொழுதொடு கேட்குநபோலக் கூறியதற்கு, "(மாலைநீ............) காய்ந்த நோயுழப்பாரைக் கலக்கிய வந்தாயோ [..............மாலை]" என்பது மேற்கோள்; தொல். செய். சூ. ௨00. நச்.

௨. (அ) "மாலை, வெந்துயர்க் கண்ணின் வேலிட்டதுபோல், வந்து றுத் தன்றால் வலியெனக் கில்லென" (பெருங். (௧) ௩௩: ௯௭ - ௯௯.) என்பதும் (ஆ) "வெந்தபுண் வேலெறிந் தற்றால்" (கலி. அ௩: ௩0) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

௩. "நல்லற நெறிநிறீஇ யுலகாண்ட வரசன்பி, னல்லது மலைந்திருந் தற நெறி நிறுக்கல்லா, மெல்லியான் பருவம்போன் மயங்கிரு டலைவர, வெல்லைக்கு வரம்பாய விடும்பைகூர் மருண்மாலை" கலி. ௧௨௧: ௪-எ.

(பிரதிபேதம்) *கூடியநீ, † எனவாங்கென்றதில் ஆங்கசை, ‡ காத்தாற்று நல்லிறை.

கஉ மாலை நீ;
கலந்தவர் காமந்தைக் கனற்றுவோ செய்தாய்ம
னலங்கொண்டு நல்காதார் நனிநீத்த புலம்பின்க
ணலந்தவர்க் கணங்காத றக்கதோ நினக்கு ;

கங மாலை நீ;
எங்கேள்வற் றருதலுந் தருகல்லாய் துணையல்லோ
பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்
திருந்தாத செயினல்லா லில்லையோ நினக்கு ;

எனவாங்கு;

உக ஆயிழை மடவர லவல மகலப்
பாயிருட் பரப்பினைப் பகல்களைந் ததுபோலப்
போயவர் மண்வெளவி வந்தனர்
சேயுறை காதலர் செய்வினை முடித்தே.

இது "வேளிப்படை தானே கற்பினு டோப்பினு, ஞாங்கர்க் கிளந்த மூன்றுபொரு ளாக, வரையாது பிரிதல் * கிழவோற் கில்லை" (க) என்பதனன் அரசன் மண்கோடற்கு ஏவுதலின் வாளாணோதிரும் பிரிவின் கண், தலைவன் வரைவிடைவைத்து வேந்தற்குற்றுழிப் பிரிந்துழி அவள் வருத்தமிகுதி கண்டார் கூறியது.

இதன்பொருள்.

தொல்லியன் ஞாலத்துத் தொழிலாற்றி ஞாயிறு
வல்லவன் கூறிய வினைதலை வைத்தான்போற்
கல்லடைபு கதிர்கான்றிக் (உ) கண்பயங் கெடப்பெயர
(ந) வல்லது கெடுப்பவ னருள்கொண்ட முகம்போல
மல்லனீர்த் திரையூர்பு மாவிருண் மதிசீப்ப

---

க. தோல். களா. சூ. ருo.

உ. (அ) "மலர்தலை யுலகத் திருளெறி விளக்கு, மன்னுயிர் விழிக்கக் கண்ணிய கண்ணும்........பரிதிவா னவனே" கல். நந:உந-நக; (ஆ) "இருவிழிகள் வாண்முகத்தி லிருந்தாலும் வானிரவி யெழுந்தா லன்றிக், கருதுநிலைப் பல்பொருளுங் காண்டலரிதாம்" திருக்குற்றலப். நூற்பயன். க.

ந. "குட்டுவன், குடிபுறந் தருங்காற் றிருமுகம் போல, வுலகுதொழத் தோன்றிய மலர்கதிர் மதியம்" சிலப். உஅ: நஎ-நகூ.

(பிரதிபேதம்) * கிழவற்கில்லை.

வில்லவ னொழுக்கம்போ (௧) லிருங்கழி மலர்கூம்பச்
(௨) செல்லுமென் னுயிர்ப்புறத் * திறுத்தந்த மருண்மாலை

எ - து: ஞாயிறு தன்கதிர்களாலே ஞாலத்திடத்துப் பழைய இயல்பினை யுடைத்தாய்த் தான்செய்துபோதும் பொருள்களை விளக்குந் தொழிலிலே ஊன்றி நடத்தி, பின்னர்க் காமன் தனக்கு யான் பிரிந்திருந்தாரை வருத்துதற்கு நீ போவாயாக என்று கூறியகாரியத்தினைத் தன்றலையிலே ஏறட்டுக் கொண்டுபோவான்போலே அத்தகிரியைச் சேர்ந்து, பல்லுயிருந்தங்கண்களாற் கொள்ளும் பயன்கெடும்படி போக, தீவினையைப் போக்குகின்றவனுடைய அருளைக்கொண்ட முகம்போலத் திங்கள் வளப்பத்தையுடைய கடலிற் றிரை மேலே தோன்றி அம்மயக்கத்தையுடைய இருளைப் போக்க, பொருளில்லாதார் நிகழ்த்தும் இல்லறம்போலக் கரிய கழியின் மலர்கள் ஒழுகக் குவிய, தேய்கின்ற என்னுயிரின் புறத்தே வந்துவிட்ட மாலாய்! நீ அறிவு மயங்குதலையுடைய மாலையாய் இருந்தாய்; என்றுங் கூறினாள். எ - று.

அ மாலைநீ

(௩) இன்புற்றார்க் கிறைச்சியா யினையவதே செய்தாய்ம
னன்புற்று ரழநீத்த வல்லலுட் கலங்கிய
† துன்புற்றார்த் துயர்செய்த றக்கதோ நினக்கு

எ - து: அங்ஙனங் கூறியவள், அதற்குக் காரணமென்னெனின், கூடி இன்பமுற்றவர்களுக்கு நேயமாய் அவர்கள் தம்மிற் கூடும் நிலைமையையோ மிகவும் முன்பு செய்துபோந்தாய்; இப்பொழுது ஆடவர் தம்மேல் அன்புற்ற மகளிர் அழும்படி தம்மைக் கைவிட்டதனால் உண்டான அல்லலிடத்தே நின்று கலங்கிய துன்பமுற்ற மகளிரை வருத்தஞ் செய்தல் நினக்குத் தக்கதன்றே; என்றாள். எ - று.

மேல் வருகின்றவற்றிற்கும் இங்ஙனங் கூட்டி உரைக்க.

---

௧. "இம்மாலை, இருங்கழி மாமலர் கூம்ப" கலி. ௧௩௦: ௧௧-௧௨.

௨. புறம் இடப்பொருளைக் காட்டிவரும் உருபாய் வருதற்கு, இவ்வடி மேற்கோள்; நன். பெயரி. சூ. ௬௫. மயிலை. சங்கர. வி. இரா.

௩. "மாலைநீ, தூவறத் துறந்தாரை நினைத்தலிற் கயம்பூத்த, போதுபோற் குவிந்தவென் னெழினல மெள்ளுவா, யாய்சிறை வண்டார்ப்பச் சினைப் பூப்போற் றளைவிட்ட, காதலர்ப் புணர்ந்தவர் காரிகை கடிகல்லாய்" கலி. ௧௧௮: ௯-௧௨.

(பிரதிபேதம்) * இறுத்தமருள், † துன்புற்றார் துயர்ச்செய்தல்.

கஉ மாலைநீ

கலந்தவர் காமத்தைக் * கனற்றலோ செய்தாய்ம
னலங்கொண்டு நல்கார் நனிநீத்த புலம்பின்க
ணலந்தவர்க் கணங்காத றக்கதோ நினக்கு

எ - து: மகளிரைக் கூடிய கணவருடைய மனவேட்கையை அம்மக ளிர்க்குத் துணையாய் நின்று அவர் மனத்தினின்று நீங்காது † கனன்றெரியுந் தன்மையையோ முன்பு ‡மிகவுஞ் செய்தாய்; இப்பொழுது அம்மகளிர் || நலத் தைக் கைக்கொண்டு பின்பு அவர்க்குக் கொடாத ஆடவராலே தந்நலம் போன தனிமையிடத்தே நின்று அலந்த மகளிர்க்குத் துணையாகாதே வருத்தமாகல் நினக்குத் தக்கதன்றே; என்றாள். எ - று.

க௩ மாலைநீ

எங்கேள்வற் (க) றருதலுந் தருகல்லாய் துணையல்லை
பிரிந்தவர்க்கு நோயாகிப் புணர்ந்தவர்க்குப் புணையாகித்
திருந்தாத செயினல்லா லில்லையோ நினக்கு

எ - து: எம்முடைய கேள்வரை × முன்புபோல மனத்தைக் கனலப் பண்ணி ஈண்டுத் தருதலுஞ் செய்திலை; ஆதலால் நீ எமக்குத் துணையல்லை; தான் பிரிந்திருந்த மகளிர்க்கு அப்பிரிவாற்றோன்றிய நோயின்வடிவு நீதானே யாய்க் கூடியவர்களுக்கு அவர் பெறும் இன்பத்திற்கோர் தெப்பமாய், இங்ஙனம் நன்மையாகாத காரியங்களைச் செய்தொழுகுமதல்லது நினக்கு நன்மை யாகச் செய்யுங் காரியங்கள் இல்லையோ; என்றாள். எ - று.

இது, கலக்கம் என்னும் மெய்ப்பாடு.

+ எனவாங்கு

எ - து: என்று சொல்லி. எ - று.

ஆங்கு; அசை.

உக ஆயிழை மடவர லவல மகலப்
பா(உ)யிருட் பரப்பினைப் பகல்களைந் ததுபோலப்
போயவர் (௩) மண்வெளவி வந்தனர்
சேயுறை காதலர் செய்வினை முடித்தே.

---

க. "உண்ணலு முண்ணேன்" (கலி. உ௩: எ) என்பதும் அதன் குறிப்பும் நோக்குக.

உ. "ஞாயிற்று முன்ன ரிருள்போல் மாய்ந்தது" (கலி. ௪உ: ௩க) என் பதும் அதன் குறிப்பும் இங்கே அறிதற்பாலன.

௩. "மண் வெளவி வருபவர்" கலி. ௩க: க.

(பிரதிபேதம்) * கனறலோ, ‡ நின்றெரியும், ‡ மிகச் செய்தாய், || நலத்தைக் கொண்டு, × முன்பு போன் மனத்தை, + எனவாங்கு ஆங்கசை.

* எ - து: திருந்தின இழையினையுடைய மடப்பம் வருதலையுடையவள் வருந்தியவிடத்தே தூரிய நிலத்தே உறைகின்ற காதலர் பகைவரிடத்துச் செய்யும் போர்த்தொழில்களைப் போய் முடித்து அவர்மண்ணைக் கைக் கொண்டு பரந்த இருட்பரப்பினை ஞாயிறு போக்கினாற்போல அவள் வருத்தம் நீங்கவந்தார்; இஃது என்னவியப்போ எனக் கண்டார்கூறியதாக உரைக்க. எ - று.

இது, கண்டார்க்கு † அவர் ஆக்கங்கண்டு மருட்கை பிறந்தது.

"தானே சேறலுந் தன்னொடு சிவணிய, வேனோர் சேறலும் வேந்தன் மேற்றே" (௧) என்பதனால், முடியுடைவேந்தன் தன் பகைமேற் சென்று மண்கோடல் உரித்து என்றதனானும், வாளாணெதிரும் பிரிவு முடியுடை வேந்தர்க்குச் சிறுபான்மையென்றும் அவர் ஏவப்பிரியும் அரசர்க்குப் பெரும் பான்மையென்றுங் கூறலானும், "வெளிப்படை தானே கற்பினொடொப்பினு, ஞாங்கர்க் ‡கிளந்த மூன்றுபொருளாக, வரையாது பிரிதல், || கிழவோற் கில்லை" (௨) என்றதனான்வரைவிடைவைத்து மண்கோடற்குப்பிரிதலில்லையென்று அதனை விலக்கினமையானும் கண்டார் களவிற்கூறுதலின்மையானும், இப்பாட்டும் × அவள் மிகவும் வருத்தம் எய்தின நிலைமையைக்கண்டு வருந்தினோர் அவன் வந்து கூட வருத்தம் நீங்கினமை கண்டு வியந்து கூறிய பெருந்திணையாம்.

இதுவும் இடையிடை சொற்சீரடிவந்து எண்ணிடையிட்டுச் சின்னங் குன்றிய கொச்சகம்.　　　　(௩௧)

(௧௪௬) நிரைதிமில் களிறாகத் திரையொலி பறையாகக்
கரைசேர் புள்ளினந் தஞ்சிறை படையாக
வரைசுகால் கிளர்ந்தன்ன வுரவுநீர்ச் சேர்ப்பகேள் ;
௪ கற்பித்தா னெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கட்
டப்பித்தான் பொருளேபோற் றமியவே தேயுமா
லொற்கத்து ளுதவியார்க் குதவாதான் மற்றவ
னெச்சத்து ளாயினுமஃ தெறியாது விடாதேகாண் ;
அ கேளிர்க ணெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்க
டாளிலான் குடியேபோற் றமியவே தேயுமாற்
சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண் ;
ஆங்கு ;

௧. தொல். அகத். சூ. ௨௭.

௨. தொல். களவியல். சூ. ௫௦.

(பிரதிபேதம்) * எ - து : என்று சொல்லித் திருந்தின, † அவளாக்கங், ‡ கிளர்ந்த, || கிழவற்கில்லை, × இவள் மிகவும்.

௧௩ அனைத்தினிப் பெரும வதனிலை நினைத்துக்காண்
சினைஇய வேந்த னெயிற்புறத் திறுத்த
வினைவரு பருவரல் போலத்
துனைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.

**இது வரைவு நீட்டித்துழித் தலைவியது ஆற்றமை கூறித் தலைவனை வரைவு கடாயது.**

**இதன் பொருள்.**

நிரை (௧) திமில் களிறாகத் (௨) திரையொலி பறையாகக்
கரைசேர் (௩) புள்ளினத் தஞ்சிறை படையாக
வரைசுகால் கிளர்ந்தன்ன (௪) வுரவுநீர்ச் சேர்ப்பகேள்

எ - து: நிரைத்த திமில்கள் களிறாகத் திரையொலிக்கின்ற ஓசை பறையாக இனத்தினையும் அழகிய சிறகினையுமுடைய கரையைச் சேர்ந்த புட்கள் காலாட்படையாகப் பாண்டியன் (௫) பகைவர்மேற் படையெழுச்சியாய்ச் சென்றாலொத்த செலவினையுடைத்தாகிய வலியினையுடைய கடலைச் சேர்ந்த நிலத்தை யுடையவனே! யான் கூறுகின்றதனைக் கேள். எ - று.

(௬) தான் பாதுகாக்கின்ற கரையை அரசனைப் போலே சென்று அழிக்கின்ற கடற்சேர்ப்பனென்றதனால், தான் பாதுகாக்கப் படுகின்ற நம்மை

௧. இந்நூற்பக்கம் ௮௨௨: ௧.ஆம் குறிப்பு நோக்கற்பாலது.

௨. "குணில்பொரக் குளிறின முரசம்.........முணையினாற் கடலக முழக்க மொத்தவே" சீவக. ௨௨௨௨.

௩. "கம்புட் கோழியுங் கனைகுர லுரையுஞ், செங்கா லன்னமும் பைங்காற் கொக்குங், கானக் கோழியு நீர்நிறக் காக்கையு, முள்ளு மூராலும் புள்ளும் புதாவும், வெல்போர் வேந்தர் முனையிடம் போலப், பல்வேறு குழூஉக்குரல் பரந்த வோதையும்" சிலப். ௧௦: ௧௧௪-௧௧௬.

௪. "உரவுநீர்ச்சேர்ப்ப" (கலி. ௧௨௭: ௨௨) என்பதும் அதன்குறிப்பும் பார்க்க.

௫. "முடிமன ரெழுதரு பருதி மொய்களி, றுடைதிரை மாக்கல மொளிறு வாட்படை, யடுதிற லெறிசுறா வாகக் காய்ந்தன, கடலிரண் டெதிர்ந்த தோர் கால மொத்ததே." சீவக. ௨௨௨௩.

௬. (அ) கலி. ௧௨௫. தரவின்விசேடவுரையில், 'தன்னாற் பாதுகாக்கப் படுகின்ற மணற்குன்றைத் தானே கரைத்தாற்போல நின்னாற் பாதுகாக்கப்படுந்தலைவியை நீதானே வருத்தாநின்றாய் என உள்ளுறையுவமங்கொள்க' என்றும் (ஆ) சீவக. ௨௮௦-ஆம் செய்யுளின் முன்குறிப்பில், 'தனக்குவேலியாகிய கரையைக் கடல் தானே கொல்லுகின்றாற் போலத் தமக்குக்காவலாகிய அரசனைப் படை தாமே கொல்லுகின்றதென்றார்' என்றும் இவர் எழுதியிருப்பவை ஈண்டு அறிதற் பாலன.

வரைந்துகொண்டு பாதுகாவாமல் * அழிக்கின்றானென உள்ளுறையுவமங் கந்தவாறுணர்க. இனிப் பகையின்றி இருக்கின்ற கடல் பகைபோற் றோன்றி னாற்போல, அயலார் பகைபோல அலர்கூறி வருத்துகின்றானென்றலும்ஒன்று.

ச (க) † கற்பித்தா னெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் ‡விச்சைக்கட்
டப்பித்தான் பொருளேபோற் றமியவே தேயுமா
(உ).லொறக்கத்து || னுதவியார்க் குதவாதான் மற்றவ
னெச்சத்து ளாயினு × மஃ தெறியாது விடாதேகாண்

எ - து: தனக்கோர் வருத்தமுற்றவிடத்து உதவினவர்கட்கு ஓர் வருத்தம் வந்தால் உதவாதவன், தன்னை நான்முதலிய கற்பித்த ஆசிரியன் தன்பால் ஒன்றுபெறுமல் மனம்வருந்த, தன்கைப்பொருளை அக்கல்விப்பொருட்குக் கைம்மாறாகக் கொடுத்துஉண்ணுனாய், தான்கற்ற விச்சையிடத்தே தப்புப் பண்ணிக்கொண்டவனுடைய கல்விப்பொருள் நாடோறுந் தேயுமாறுபோல, தானே தானாகத் தேயாநிற்பன் ; அதுவேயன்றிப் பின்பு (ங) அச்செய்கன்றிக் கேடாகிய அது தன்னுடம்பினை ஒழித்து உயிர்போனவிடத்தே யாயினும் நுகர்வியாமற் போகாதுகாண். எ - று.

---

க. "குரவர் தக்கிணை காத லோடு வழங்கிலார், தீப்ப வங்களும்" சேது. சங்கதீர்த்த. ௨0.

உ. (அ) "செல்வத்துட்சேர்ந்தவர் வளனுண்டுமெற்றவ, ரொல்கத்து நல்கிலா வுணர்விலார்" (ஆ) "முன்னொன்றுதமக்காற்றி முயன்றவரிறுதிக்கட், பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடையாளர்" (கலி. உ௫: கக - உ0, ௩௪: ச-௫)என்பவையும்அவற்றின்குறிப்புக்களும்இங்குஅறிதற்பாலன.

ங. (அ) "நிலம்புடை பெயர்வ தாயினு மொருவன், செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென, வறம்பா டிற்றே" புறம். ௩௪: ௫-எ. (ஆ) "நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல, தன்றே மறப்பது நன்று" (இ) "எந் நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை, செய்ந்நன்றி கொன்ற மகற்கு" குறள். க0அ, கக0. (ஈ) "நன்றி, செய்குநர்ப் பிழைத்தோர்க் குய்வில வென்னும், குன்றா வாய்மை நின்றநிலை காட்டி" கல் ச: கக-கங. (உ) "ஒன்றொரு பயன்றனை யுதவி னோர்மனங், கன்றிட வொருவினை கருதிச் செய்வரேற், புன்றொழி லவர்க்குமுன் புரிந்த நன்றியே,கொன்றிடு மல்லது கூற்றும்வேண்டுமோ" கந்த. இரணியன் யுத்த. க0. (ஊ) "உதவிகொன் றார்க்கென் றேனு மொழிக்கலா முபாய முண்டோ" கம்ப. கிட்கிந்தை. ௬௨. (எ) "எந்நன்றி கொன் றார்க்கு முய்வுண்டா முய்வதிலை யிருமை யான, செய்ந்நன்றி கொன்ற மகற் கென்றுரைக்கு நூல்" சேது. சேதுபலச். அங.

(பிரதிபேதம்) * அழிக்கின்றாயென, † கற்பித்தார்நெஞ்சு ‡ விச்சைகடப்பித்தான், || உதவி யாற் குதவாத மற்றவன், × அஃதுதெரியாது,

அ கேளிர்க ணெஞ்சழுங்கக் கெழுவுற்ற செல்வங்க
(க) * டாளிலான் குடியேபோற் றமியவே தேயுமாற்
† சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய்நன் றாயினுமஃ தெறியாது விடாதேகாண்

எ - து: தான் சூளுறுகின்ற சூளுறவினைக் காண்கின்றவர் மனங்கொள்ளும்படி சூளுற்ற மனத்தையுடையவன் தான் சூளுற்ற காரியத்தினை முடிவுபோகாது பொய்த்துவிடுவனாயின், தன்னைச் சேர்ந்து வாழுஞ் (உ) சுற்றத்தாருடையநெஞ்சு தான் ஒன்றை அறியாமையால் வருந்தும்படி தன்னோடே கெழுமுதலுற்ற செல்வத்திடத்தே தானின்று அச்செல்வத்தை மேலே மேலே வளர்க்கும் முயற்சிதானும் இல்லாதவனுடைய குடி நாடோறுந் தேயுமாறு போலத் தானே தானாகத் தேயாநிற்பன்; அதுவேயன்றி‡பின்னர் அச்சூளுற வினைப் பொய்த்த (ங) தீவினை மறுமையில் விரவின் அது வாளின் வாய்கூரிதாய்ச் சுவர்க்கம் பெற்றானாயினும் நுகர்வியாமற் போகாதுகாண். எ - று.

இது வரைந்துகொள்வல் எனச் சூளுற்றதனைப் பொய்த்தாயென்றாள்.

ஆங்கு, அசை.

கங || அனைத்தினிப் பெரும வதனிலை நினைத்துக்காண்
சினைஇய வேந்த னெயிற்புறத் திறுத்த
வினைவரு பருவரல் போலத்
துனைவரு நெஞ்சமொடு வருந்தினள் பெரிதே.

எ - து: பெருமா! செய்ந்நன்றிக்கேடு பொய்ச்சூளுறவாகிய தீவினையின் றன்மை யாம்முற்கூறிய அத்தன்மைத்து; இனி நீதான் × அத்தன்மைத்தாதலை

---

க. (அ) "குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு, மாசூர மாய்ந்து கெடும்" (ஆ) "மடியை மடியா வொழுகல் குடியைக், குடியாக வேண்டு பவர்" (இ) "மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த, குடிமடியுந் தன்னினு முந்து" (ஈ) "குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து, மாண்ட வுஞற்றி லவர்க்கு" குறள். சு0க, சு0உ, சு0ங, சு0௪.

உ. (அ) "சிறியவன் செல்வம்போற் சேர்ந்தார்க்கு நிழலின்றி" (ஆ) "இளையழிய வாழ்பவ னாக்கம்போற் புல்லென்று" (கலி. க0: உ, ௩௯: க௮.) என்பவையும் அவற்றின் குறிப்புக்களும் இங்கே அறிதற்பாலன.

ங. (அ) "எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை, வீயாது பின்சென் றடும்" குறள். உ0எ. (ஆ) "ஊழ்வினை யுருத்துவந் தூட்டு மென்பதூஉம்" சிலப். பதி. ருஎ. (இ) "ஒளிப்பினு மூழ்வினை யூட்டாது கழியாது" இறை. சூ. உ. மேற்கோள். (ஈ) "உயிர்புகுஞ் சட்டக வழிதொறு முழிதொறும், பழவினை புகுந்த பாடகம் போல" கல். கக: க-உ.

(பிரதிபேதம்) *ஆளிலான் † சூள்பொய்த்த மனத்தவன் வினைவாய்ப்பின். ‡ பின்னச்சூளுற வினை, || அனைத்தாக, × அத்தன்மைத்தினிதாதலை.

நின் மனத்தால் நினைந்துபார்; இவள் தான் தன்பகைவனோடு * சினந்த அரசன் அவன் எயிற்புறத்தே சென்றுவிட்டவினையால் (க) உழிஞையானுக்குவந்த வருத்தம்போலே வரைவு கடிதின்முடிதற்கு விரைதல் வரும் நெஞ்சத்தாலே பெரிதும் வருந்தினாள்; இனி அவ்வருத்தம் நீங்கும்படி கடிதின் வரைவாயாக என வரைவுகடாயினாள். எ - று.

இதனால், தலைவற்கு அசைவுபிறந்தது.

(உ) இது சிறுமைக்கு எல்லைகூறிய நான்கடியாயின்றி மூன்றடியான்வந்த தரவும் நான்கடித்தாழிசை இரண்டும் † ஆசிரியச்சுரிதகமும் வந்தமையால் யாப்பின் வேறுபட்ட ‡ பாநிலைவகைக் கொச்சகம். (௩உ)

(கருO) அயந்திகழ் நறுங்கொன்றை யலங்கலந் தெரியலா
னியங்கெயி லெயப்பிறந்த வெரிபோல வெவ்வாயுங்
கனைகதிர் தெறுதலிற் கடுத்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழன்
மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம்;

எ. இறந்துதா மெண்ணிய வெய்துதல் வேட்கையா
லறந்துறந் தாயிழா யாக்கத்திற் பிரிந்தவர்
பிறங்குநீர் சடைக்கரந்தா னணியன்ன நின்னிறம்
பசந்துநீ யினையையாய் நீத்தநு நீப்பவோ;

கக. கரிகாய்ந்த கவலைத்தாய்க் கல்காய்ந்த கர்ட்டகம்
வெருவந்த வாறென்னார் விழுப்பொருட் ககன்றவ
ருருவவேற் றார்தியா னொள்ளணிநக் கன்னாநின்
னுருவிழந் தினையையா யுள்ளாது முள்ளுபவோ;

கரு. கொதித்துராய்க் குன்றிவர்ந்து கொடிக்கொண்ட கோடையா
லொதுக்கரிய நெறியென்னு ரொண்பொருட் ககன்றவர்

---

க. இந்நூற்பக்கம் அஎக: சு-ஆம் குறிப்புப்பார்க்க.

உ. இச்செய்யுளை இளம்பூரணர் தரவின்றாகித் தாழிசைபெற்றுவரும் கொச்சகவொருபோ கென்றுகூறி, "நிரைதிமில்......சேர்ப்பகேள்" இது நான்கடியாகி வாராமையிற் றாழிசையாயிற்று. 'கற்பித்தான்..........விடாதேகாண்' 'கேளிர்கள்.........விடாதே காண்' இவையிரண்டும் தாழிசை. 'ஆங்கு,........பெரிதே' இது சுரிதகம்" என்று விளக்குவார்; தொல். செய். சூ. கசஉ. 'தரவின் றாகித்'

(பிரதிபேதம்) * சினத்தஅரசன், †ஐயடிச்சுரிதகமும், ‡பாவகை நிலைக்கொச்சகம்.

புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண்ஞான் றன்னநின்
கதுப்புலறுங் கவினையாய்க் காண்டலுங் காண்பவோ;
ஆங்கு;
அரும்பெற லாதிரையா னணிபெற மலர்ந்த
பெருந்தண் சண்பகம் போல வொருங்கவர்
பொய்யா ராகுத றெளிந்தன
மையீ ரோதி மடமொழி யோயே.

இது பொருள்வயிற் பிரிந்த தலைவனை நினைந்து ஆற்றாத தலைவியைத் தோழி ஆற்றுவித்தது.

இதன்பொருள்.

* ஆயந்திகழ் நறுங் (க) கொன்றை யலங்கலந் தெரியலா
† னியங்கெயி லெயப்பிறந்த வெரிபோல வெவ்வாயுங்
(உ) கனைகதிர் தெறுதலிற் கடுத்தெழுந்த காம்புத்தீ
மலைபரந்து தலைக்கொண்டு முழங்கிய முழங்கழன்
மயங்கதர் மறுகலின் மலைதலைக் கொண்டென
விசும்புற நிவந்தழலும் விலங்கரு வெஞ்சுரம்

எ - று: சீர்நிலைக்கருகே விளங்குகின்ற அலங்கலையுடைய கொன்றை மாலையையுடைய (ங) இறைவன் திரிபுரத்தையெய்கைஞலேதோன்றின முழங்கும்

---

க. (அ) "கண்ணி கார்நறுங் கொன்றை" புறம். க: க; (ஆ) "கொன்றைத் தார் சுவற்புரள" கலி. க: கக. என்பவற்ருல், கொன்றைப்பூ இறைவனுக்குக் கண்ணியும் தாருமாதல் அறியப்படும்; அஃதன்றி மாலையுமாதல் "கொன்றை யவன்" (கலி ௧௪௨: ௨௮) என்பதன் குறிப் பால் அறியலாகும்; (இ) "கார்விரி கொன்றைப் பொன் னேர் புதுமலர்த், தாரன் மாலையன் மலைந்த கண்ணியன்" (அகம். கடவுள்.) என மூன்றுமாகக் கூறப்படுதல்காண்க.

உ. "கனைகதிர் தெறுதலால்" (கலி. கக : க௭) என்பதும் அதன் குறிப்பும் பார்க்க.

ங. "மட்டணி மூதூர் மனை தொறு மரீஇய, கட்டணி கூந்தற் கள்ள மங் கைய, ட்டிலு மறையும் விட்டெரி கொளுவலி, னெட்டெனக் கூறிய திசை திசை தொஉ, மைந்தலை யுத்தி யாவுநா ணுக, மந்தர வில்லி னந்துணன் விட்ட, தீவா யம்பு திரிதரு நகரி, ஞெவா தெழு மடங் குட்குவாத் தோன்றி" பெருங். (க) ௪௩: ௧௧௫-௧௨௧.

(பிரதிபேதம்) * அலர்ந்திகழ, † இலங்கெயில்.

வெம்மையையுடைய நெருப்பு விசும்புற நிவந்து அழலுமாறு போல, செறிந்த கிரணங்களையுடைய ஞாயிறு எவ்வாயுஞ் சுடுகைகளாலே முளிந்த (௧) மூங்கில் தம்மிலே இழைதலைக் கொண்டதாக அதனிடத்தே கடுத்தெழுந்த முழங்கிய காட்டுத்தீ அவ்விடத்தைக் கைக்கொண்டு விசும்பிலே உறவோங்கி வெம்மையைச் * செய்யும், (௨) விலங்குகள் பலகாலுந் திரிகையினாலே மயங்கின அதரை யுடைய, மலைகள் பார்த்துகுறுக்கிட்டுக் கிடக்கும் போதற்கரியசுரத்தை.எ - று.

செய்யுஞ்சுரம், அதரையுடையசுரம், போதற்கரியசுரம்; என்க.

விலங்கு, வருவிக்க. அலங்கலையுடைய கொன்றை என்றார், (௩)தாராகப் பூத்தலின். அலங்கல், அசைவுமாம்.

எ இறந்துதா மெண்ணிய வெய்துதல் வேட்கையா

லறந்துறந் தாயிழா யாக்கத்திற் பிரிந்தவர்

---

௧. (அ) "ஞெலிக்ழை முழங்கழல் வயமா வெரூஉங், குன்றுடை யருஞ்சுரம்" (ஆ) "முளிவயிர்ப் பிறந்த வளிவளர் கூரெரிச், சுடர்விடு நெடுங்கொடி விடர்முகை முழங்கு, மின்னு வருஞ்சுரம்" ஐங்குறு. ௩௦௭, ௩௩௯. (இ) "கைப்பொருத வோசைபாற் கண்ணுமிழ்ந்த செந்தீ யான், மெய்ப்பொருது மீதெழுந்த வெம்புகையா-னப்ப, வெதிர்வேங் கடுங்கானம் போன்றதே வெம்போ, ரெதிர்வேர்தர் செய்த விடம்" பாரதம். (ஈ) "வயிரமெனுங் கடுநெருப்பை மிகமூட்டி வளர்க்கினுயர் வரைக்கா டென்னச், செயிரமரில் வெகுளிபொரச் சேரவிரு திறத்தே முஞ் சென்று மாள்வோம்" வில்லி. கிருட்டினன். ௬.

௨. (அ) "மாநிரை, மாஅல் யானை யொடு மறவர் மயங்கித், தூறதர் பட்ட வாறுமயங் கருஞ்சுரம்" கலி. ௫: ௧-௩, (ஆ) "மாமறுகலின் மயக்குற்றன வழி"............(இ) "மானதர் மயங்கிய மலைமுதற் சிறுநெறி" நாற். ௬. ௧௬௧. மேற்கோள்.

௩. (அ) "ஏதில பெய்ம்மழை காரென மயங்கிய, பேதையங் கொன்றைக் கோதையிலை நோக்கி" (ஆ) "குறும்பல் கோதை கொன்றை மலர" ஐங்குறு. ௪௬௨, ௪௬௭. (இ) "நாண்மலர்க் கொன்றையும் பொலந்தார் போன்றன" பரி. ௧௮: ௪௦. (ஈ) "பொன்போலுர் கொன்றை புரிந்தன" திணைமாலை. ௧௦௬. (உ) "தாரி ஞர்விரி கொன்றையாய்" (ஊ) "தொடைநவில் கொன்றையந் தாரினும்" (எ) "தொடை மலி யிதழியும்" (ஏ) "தொடைய லார்நறுங் கொன்றையான்" (ஐ) "தொடைநவில் கொன்றை யொடு" (ஒ) "தாரணி கொன்றை யும்" (ஓ) "தாருறு கொன்றை தம்முடி வைத்த சைவனுர்" (ஔ) "கணிவளர்தார்ப் பொன்னிதழிக் கமழ்தார் கொண்டார்" தேவாரம். (ஃ) "கொன்றைகண்மேற், றூங்குபொன் மாலைக ளொடு" நாலா யிர.நாச்சியார். ௬ . ௬.

(பிரதிபேதம்) * செய்யுஞ் சுரத்தையென்க மலைகள்பார்த்து.........போதற்கரியசுரம் விலங்குள்......அதரையுடைய சுரம், விலங்குவருவிக்க.

(க) பிறங்குநீர் சடைக்கரந்தா னணியன்ன நின்னிறம்
பசந்துநீ யினையையாய் * நீத்தலு நீப்பவோ

எ - து: ஆயிழாய்! தாம் எண்ணிய காரியங்களைப் பெறுதலானுள்ள விருப்பத்தாலே அறத்தினைக் கைவிட்டு வெஞ்சுரத்தையிறந்து பிறங்குகின்ற நீரைச் சடையிலே மறைத்தவனைஒத்த பொருளாக்கத்திலே பிரிந்தவர் அழகினையுடைய நின்னிறம் பசந்து நீ இத்தன்மையையாக நின்னைக் கைவிடுதலுஞ் செய்வரோ? அங்ஙனஞ் செய்யார்காண். எ - று.

(உ) இறைவனை ஒத்தபொருள் என்றார், பொருள் நின்றுழிநில்லாது பலரிடத்துஞ் சென்றதேனும் ஒன்றானும் தனக்குக் கேடின்றி யிருத்தலின்.

அணி-அழகு.

கக கரிகாய்ந்த கவலைத்தாய்க் (ங) கல்காய்ந்த காட்டகம்
வெருவந்த வாறென்னார் விழுப்பொருட் ககன்றவ
ருருவவேற் றார்தியா † னொள்ளணிநக் கன்னநின்
‡ னுருவிழந் தினையையா யுள்ளலு முள்ளுபவோ

எ - து: வெந்த கரியினையுடைய பல வழியினையுடைத்தாய்க் கற்கள் காய்ந்த காட்டகத்தை வெருவுதல் வந்த வழியென்று கருதாராய் வடிவையுடைய எறுகிய ஊர்தியையுடையானை ஒத்த விழுப்பொருட்கு அகன்றவர் ‖ நக்கஒள்ளிதாகிய அணியினையுடைய நின்னுருவை இழந்து நீ ✝ இத்தன்மையையாக அப்பொருளையேநினைத்தலையுஞ் செய்வாரோ? அங்ஙனஞ்செய்யார் காண். எ - று.

∴ நக்கு என்னும் எச்சம் ஒள்ளிதாகிய என்னும் வினை கொண்டது.

---

க. "தேறுநீர் சடைக்கரந்து" கலி. க: உ.

உ. "அருவிதாழ்ந்த" (புறம். கக௲: க) என்னும் செய்யுளில் 'ஆலமர் கடவுளன்னநின்' என்றதற்கு ஆலின்கீழமர்ந்த முக்கட் செல்வனாகிய கடவுளையொப்ப என்பும் நிலைபெற் றிருப்பேனென் றிருக்கின்ற நின் னென்று ரைப்பினுமமையும்' என்று எழுதியிருக்கும் பின்னுரையும் "வீதலறியா விழுப்பொருள்" (கலி. அசு: உக) என்பதற்கு எழுதியிருக்கும் உரையும் ஈண்டு அறிதற் பாலன.

ங. (அ) "மலை வெம்பிய போக்கரு வெஞ்சுரம்" (கலி. அ: சு) என்பதும் (ஆ) "மலைவெம்ப" (கலி கங: ரு) என்பதும் (இ) அதன்குறிப்பும் ஒப்பு நோக்கற் பாலன.

(பிரதிபேதம்) * நீக்கலு நீக்கலோ, † ஒண்ணக்க ணியனநின், ‡ னெருவிழந்து, ‖ நமக்கு ஒள்ளிதாகிய ணியினையுடைய, ✝ இத்தன்மையாக, ∴ நக்களன்னும்.

கொதித்துராய்க் குன்றிவர்ந்து (க) கொடிக்கொண்ட கோடையா
லொதுக்கரிய நெறியென்னு ரொண்பொருட் ககன்றவர்
(உ) புதுத்திங்கட் கண்ணியான் பொற்பூண்ஞான் றன்னநின்
* கதுப்புலறுங் கவினையாய்க் காண்டலுங் காண்பவோ

எ - து: ஞாயிறு கீழ்த்திசையிடத்து உதயகிரியிலே வந்து தோன்றிப் பின்பு கொதித்துப் பரந்து தான்கொண்ட கோடைக் காலத்தாலே போதற்கு அரிய வழியென்று கருதாராய்ப் புதிய திங்களாகிய கண்ணியையுடையானை யொத்த ஒள்ளியபொருட்கு அகன்றவர் பொன்னாற்செய்த தலைக்கோலங்கள் தாழ்ந்து விளங்கின நின்மயிர் அவ்வாறன்றிக் காய்கின்றஅழகை நீ யுடையையாக அப்பொருள் வேட்கையை மனத்தாற் காணுதலையுஞ் செய்வரோ? அங்ஙனஞ் செய்யார்காண். எ - று.

ஆங்கு, அசை.

அரும்பெற (௩)லாதிரையா னணிபெற மலர்ந்த
பெருந்தண் சண்பகம் போல வொருங்கவர்
பொய்யா ராகுத றெளிந்தன
மையீ ரோதி மடமொழி யோயே

எ - து: கருமையினையும் நெய்ப்பினையுமுடைய † ஓதியினையும் மடப்பத்தையுடைய மொழியினையுமுடையாய்! பெறுதற்கு அரிய ஆதிரைநாளையுடைய(௪) இறைவன் திருமேனி அழகைப்பெறும்படி மலர்ந்த பெரியகுளிர்ந்த இச்சண்பகம் பருவம்பெய்யாதவாறுபோல அவர் தாங் கூறிய பருவத்தைப் பொய்யாராய்வருதலைஅவர்கூறியகூற்றால்நீயும்யானும் ஒருங்கு தெளிந்தேம்;

---

க. "கொடிமிசை மையறு மண்டிலம்" கலி. க௪க: கக-கஉ.

உ. (அ) "திங்கட் புதுமுகிழ் சூடினரே" தேவாரம். (ஆ) "குளிர் மதிக் கண்ணியாற்கு" சீவக. உ0அ. (இ) "அந்நெடு வேணியிற் கண்ணியென விருந்து, தாற்றுமறு வொழிந்த வேற்றத் தானும்" கல். உ௩: ௩உ-௩௩; (ஈ) "திங்கட் கண்ணி முழுமுதலை" கூர்ம. தக்கனைச். ககூ. (உ) "மாசறு மிளமதிக் கண்ணி வார்சடை, யீசன்மேல்" காசீ. காசியின் சிறப்பு. உஎ. (ஊ) "திங்களங் கண்ணி யானை" சேது. சீதைகுண்டச். ௪௩. (எ) "ஆருடிய வேணியின் மீமிசைமிக் கமிழ்தாடிய வெண்மதிக் கண்ணியனே" (ஏ) "நாண்மதிக் கண்ணி யார்தாம்" திருவானைக்காப். பராசரன். ௪க, கவுதமப். கூ௩. (ஐ) "வளையு மாமதிக் கண்ணியான்" விநாயக. கணபதி. க௪. (ஒ) "உருவவெண் டிங்கட் கண்ணி யொண் சுடர்க்கு" உத்தரகோச. ஐந்தெழுத்து. ககூ.

௩. "பின்னரு, மாதிரையா னாதிரையா னென்றென் றயர்வுறுமா, லூர் திரைநீர் வேலி யுலகு" முத்தொள். கடவுள் வாழ்த்து.

௪. "செண்பக மலரெனச் சிவந்த மேனியாள்"

(பிரதிபேதம்) * கதுப்புலருங் கவினை, † ஓதியினையுடைய மடப்பத்தை.

அவ்வனந் தெளிந்த பருவங் கழிவதற்கு முன்னே வருவர்; அவர் மொழியைத் தெளிவாயாக என ஆற்றுவித்தாள். எ - று.

இது கைம்மிகலென்னும் மெய்ப்பாடு எய்திநின்ற தலைவிக்குப் பின்னர்ச் சூழ்ச்சி பிறந்தது.

(௧) இஃது இளவேனிற் பருவங்குறித்து வற்புறுத்திப் பிரிய ஆற்றியிருந்து அப்பருவம் வந்தபின்னர் ஆற்றாளாய் இரங்குகின்ற தலைவியைத் தோழி ஆற்றுவித்தலான் இரக்கமாகிய உரிப்பொருள் சிறத்தலின், அவ்வுரிப்பொருள் முதலினுங் கருவினுஞ் சிறந்ததென்று இரக்கத்திற்கு உரிய நெய்தலிற் கோத்தார்; "முதல்கரு வுரிப்பொரு ளென்ற * மூன்றே, நுவலுங் காலை முறைசிறந் தனவே, பாடலுட் பயின்றவை நாடுங் காலை" (௨) என்றாராகலின். இது பாலைக்கு உரிய முதலுங் கருவும் † வந்து அதற்கு உரிய உரிப்பொருள் சிறவாமல் நெய்தற்கு உரிய உரிப்பொருள் சிறந்ததாயிற்று.

இது தரவியல் ஒவ்வாது ‡ அதனகப்பட்டுவந்த சுரிதகத்தானிற்ற ஒத்தாழிசைக்கலி. (௩)

"முல்லை || குறிஞ்சி மருத நெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (௩)என்புழி, சொல்லாதமுறையாற் சொல்லவும் படுமென்றலின் இத்தொகையைப் பாலை குறிஞ்சி மருதம் முல்லை நெய்தலென இம்முறையே × கோத்தார் + நல்லந்துவனார்.

நெய்தற்கலி முற்றும்.

## கலித்தொகை முற்றும்.

நெய்தற்கு ஆசிரியன் பாரத்துவாசி

நச்சினார்க்கினியன் செய்த

உரை முற்றும்.

---

௧. "திணைமயக் குறுதலும்" என்னுஞ் சூத்திரவுரையில் 'மயக்குறுதலும்' என்றதனான் அவ்வவ நிலங்கட்கு உரிய முதலுங்கருவும் வந்து உரிப்பொருள் வேறுதலன்றி அவ்வந் நிலங்கட்கு உரித்தல்லாத முதலுங் கருவும் வந்து உரிபொருண் மயங்குவனவுங் கொள்க வென்றும், 'தெய்வமுணவே' என்றுஞ்சூத்திரத்தினுரையில் 'எந்நில மருங்கின். என்பதனால் பூவும் புள்ளும் வரைவின்றி மயங்குமெனவே ஒழிந்த கருவும் மயங்குமென்பது 'சூத்திரத்துப் பொருளன்றியும்' என்பதனை உரையிற் கொள்க வென்றும் கூறி இச்செய்யுளை மேற்கோள் காட்டினர் நச்சினார்க்கினியர்; தொல். அகத். சூ. ௧௨; ௧௮.

௨. தொல். அகத். சூ. ௩. ௩. தொல். அகத். சூ. ரு.

(பிரதிபேதம்) * மூன்றென, † வந்துபாலைக்குரிய, ‡ அதன்கணகப்பட்டு, || குறுஞ்சி, × கோத்தார் கலித்தொகைக்கு ஆசிரியன்பாரத்துவாசி நச்சினார்க்கினி யான் செய்த உரைமுற்றும், + நல்லந்துவனார்.

# உரைச்சிறப்புப்பாயிரம்.

பாற்கடல் போலப் பரந்த நன்னெறி
நூற்படு வான்பொரு ளுண்ணிதி * னுணர்ந்
போக்கறு கேள்விப் புலவோர் புலத்தி
னற்பொருள் பொதிந்த தூக்கமை யாப்பினைத்
† தேக்கிய சிந்தைய னாகிப் பாற்பட
வெழுத்துஞ் சொல்லும் பொருளுமிம் மூன்று
மிழுக்கற வாய்ந்த ‡ வழுக்கிறொல் சீர்த்தித்
தொல்காப் பியமெனுந் தொடுகடற் பரப்பை
மறுவுங் குறைவு மின்றி யென்றுங்
கலையி னிறைந்த கதிர்மதி யென்ன
நிலையுடை கலத்தி னெடுங்கரை காணக்
கல்லா மாந்தர் கற்பது வேண்டியு
நல்லறி வுடையோர் நயப்பது வேண்டியு
முரையிடை யிட்ட காண்டிகை யுரைத்தும்;
ஆன்றோர் || புகழ்ந்த வறிவினிற் றெரிந்து
சான்றோ ருரைத்த தண்டமிழ்த் தெரிய
லொருபது பாட்டு × முணர்பவர்க் கெல்லா
முரையற + முழுதும் புரைபட வுரைத்தும்,
ஒலித்திரைத் தலத்தி னுணர்ந்தோ ருரைக்குங்
கலித்தொகைக் கருத்தினைக் காட்சியிற் கண்டதற்
குள்ளுறை யுவமமு மேனை யுவமமுந்
தெள்ளிதிற் றெரிந்து திணைப்பொருட் கேற்ப
வுள்ளுறை யுவமத் தொளித்த பொருளைக்
கொள்பவர் கொள்ளக் குறிப்பறிந் துணர்த்தி
யிறைச்சிப் பொருளுக் கெய்தும் வகையைத்
திறப்படத் தெரிந்து சீர்பெறக் கொளீஇத்
துறைப்படு பொருளொடு சொற்பொருள் விளக்கி

---

(பிரதிபேதம்) * உரைத்துப், † தேர்த்தமைச்சிந்தைய, ‡ வழுத்து தொல், || புகழ வறிவினிற், × உரையபவாககெல்லாம், + முழுதும் படைவுரு விதநும்.

முறைப்பட வினையை முடித்துக் காட்டிப்
பாட்டிடை மெய்ப்பாடு பாங்குறத் தெரித்துப்
பாற்பட நூலின் யாப்புற வுரைத்த
நாற்பெயர் பெயரா நடப்பக் கிடத்திப்
போற்ற வின்னுரை பொருள்பெற * விளம்பியும்,
வையம் புகழ்ந்து மணிமுடி சூட்டிய
பொய்யில் வான்கதை பொதிந்த செந்தமிழ்ச்
சிந்தா மணியைத் தெண்கடன் மாநிலம்
வந்தா தரிப்ப † வண்பெரு வஞ்சிப்
பொய்யா மொழிபுகழ் மையறு காட்சித்
திருத்தரு முனிவன் கருத்திது வென்னப்
பருப்பொருள் கடிந்து ‡ பொருட்டொடர்ப் படுத்து
வினையொடு முடியப் புனையுரை யுரைத்தும்,
நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
விதுபொரு ளென்றதற் கேற்ப வுரைத்தும்,
தண்டமிழ் ‖ தெரித்த வண்புகழ் மறையோன்
வண்டிமிர் சோலை மதுரா புரிதனி
லெண்டிசை விளங்க வந்த வாசான்
பயின்ற கேள்விப் பாரத்து வாச
னான்மறை துணிந்த நற்பொரு ளாகிய
தூய ஞான நிறைந்த சிவச்சுடர்
தானே யாகிய தன்மை யாள
னவின்ற வாய்மை நச்சினார்க் கினிய
× னிருவினை கடியு மருவியம் பொதியின்
மருவிய குறுமுனி தெரிதமிழ் விளங்க
வூழி யூழி காலம்
வாழி வாழியிம் மண்மிசை யானே.

---

(பிரதிபேதம்) * அமைத்தும், † வரைபெரு வஞ்சிப், ‡ பொருட்டொடர் படுத்து, ‖ தெரிந்தவண் புகழ், × அருவினைகடியும்.

தொல்காப் பியத்திற் றொகுத்த பொருளனைத்து
* மெல்லார்க்கு மொப்ப வினிதுரைத்தான்—சொல்லார்
†மதுரைநச்சி னார்க்கினியன் மாமறையோன் கல்விக்
கதிரின் சுடரெறிப்பக் கண்டு.

---

பச்சைமா லனைய மேகம் பௌவநீர் பருகிக் கான்ற
வெச்சினாற் றிசையு முண்ணு ‡ மமிழ்தென வெழுநா வெச்சின்
மெச்சினா னாரும் விண்ணோர் || மிசைகுவர் வேத போத
× னச்சினார்க் கினிய னெச்சி னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்.

---

## +கலித்தொகைக்கு

ஆசிரியன் பாரத்துவாசி நச்சினார்க்கினியன் செய்த

உரை முற்றும்.

---

(பிரதிபேதம்) * எல்லார்க்கு மேற்பவினிது, † மதுரா புரியினியான் மாமறையோ னின்பக், கதிரார் சுடர். ‡ அமிர்தென || நுகர்குவர், × நச்சினார்க் கினியா னாவி னல்லுரை நவில்வர் நல்லோர். + கலித்தொகைக்கு நச்சினாற்கினியர்

உ

கணபதி துணை.

# கலித்தொகை

## அரும்பத முதலியவற்றின் அகராதி.

—ooo—

[ எண், பக்க எண் ]

* விசேடவுரையில் உள்ளபடியே ( )இந்தகவளைவுகளுள் சொற்கள் குறிப்பிக்கப்பட்டிருத்தலால், அவற்றின்பின் வேண்டியசொல்லைச் சேர்த்தும் அல்லது அவற்றை ஆங்காங்குக்குறித்த மெய்ப்பாட்டின் முன் பெயரெச்சமாகச் சேர்த்தும் ஏற்ற பெற்றி அமைத்துக் கொள்ளுதல் அறிஞர் கடன். மெய்ப்பாட்டைப்பற்றி முகவுரையிற் சில குறிப்பிப்பேன்.

1170 ஆம் பக்கத்தில் அடியிலுள்ள குறிப்புப் பார்க்க.

கலித்தொகை

அரும்பத முதலியவற்றின் அகராதி

முற்றிற்று.

உ

கணபதி துணை.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௩ | 28 | பண்டையிற் | பண்டையில் |
| ௪௦ | 20 | புறந்தாரல் | புறந்தரல் |
| ௪௫ | 21 | னின்னுயிர் | ளின்னுயிர் |
| ௪௬ | 19 | யாளே | யானே |
| ௫௩ | 6 | போலாகாமற் | (போலாமற்) |
| ௫௮ | 14 | யுடையீராதலான் | யுடையீர், ஆதலான் |
| ,, | 3 | அவர்களே | அவர்களை |
| ௫௯ | 4 | னின்மையின் | (ளன்மையின்) |
| ,, | 11 | பலவறு | பலவுறு |
| ௬௧ | 8 | பிறிந்தன | பிறந்தன |
| ௭௧ | 36 | குற்றெழுக்க | குற்றெழுத்துக்க |
| ௭௯ | 17 | திரம்பா | திரம்பா |
| ௮௧ | 25 | ஒருபடிப்பட்ட | ஒருபடிப்பட |
| ௮௩ | 8 | சீறடித்தாமரை | (சீறடிதாமரை) |
| ,, | 32 | வாய்குவ | வாய்புகுவ |
| ௮௫ | 23 | சீறடித்தாமரை | (சீறடிதாமரை) |
| ௮௭ | 2 | ௪௧ | ௧௪ |
| ௮௯ | 10 | வாரிரை | வார் திரை |
| ௯௪ | 10 | பிறர்நாட்டு | (பிறநாட்டு) |
| ௯௮ | 6 | பிறர்நாட்டு | (பிற நாட்டு) |
| ௧௦௩ | 12 | மூன்றும் | மூன்றும் |
| ௧௦௬ | 37 | மாசர் | மாசர் |
| ௧௧௧ | 8 | பிரிதுறைந்து | பிரிந்துறைந்து |
| ௧௧௪ | 5 | வினவிற் | வினவிற் |
| ,, | 9 | காரியத்தே போய் | (காரியத்தேபோ; போய்) |
| ,, | 10 | முடித்தபின்னர் | (முடித்து, பின்னர்) |
| ௧௧௫ | 15 | கொழிவலோ | (கழிவலோ) |
| ,, | 17 | லல | லில |
| ௧௧௭ | 3 | கொழிவலோ | (கழிவலோ) |
| ,, | 12 | லல | லில |
| ,, | 37 | இல | அல |
| ௧௨௧ | 30 | விடேவுரை | விசேடவுரை |
| ௧௨௯ | 2 | இனியா | இனியான் |
| ,, | 3 | னுண்ணலு | உண்ணலு |
| ௧௩௫ | 8 | புகழ்பேற்றி | புகழ்பேத்தி |

சில இடத்துப் பிரதி யுதவியின்றி ஊகமாகத் திருத்தஞ் செய்யப்பெற்றுள்ளன; அத்திருத்தங்களுக்கு இருபுறத்தும் ( ) இந் நகவளைவு போடப்பெற்றிருக்கின்றன.

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௩௫ | 11 | பேகும் | போடும் |
| ,, | 25 | தலைவி ஆற்றுமை | தலைவியாற்றுமை |
| ௧௪௦ | 7 | ஒருநாணீ | (ஓர் நாணீ) |
| ௧௪௪ | 19 | ஏற்றலுமென்று | ஏற்றலுமொன்று |
| ௧௪௫ | 28 | திருவாய் (௩) ௨: ௧௧ | திருவாய் (௩) ௧: ௧௧ |
| ௧௪௮ | 4 | போர்மலைந்து | பொரமலைந்து |
| ௧௫௬ | 31 | நின்றது | (நின்றன) |
| ௧௫௭ | 21 | முதவிய | முதவிய |
| ௧௫௮ | 18 | னல்லாநதா | னல்லாந்தா |
| ௧௫௯ | 15 | ஊடறுத்தலை | (ஊடறுத்து அறலை) |
| ௧௬௦ | 4 | சேனிடை | சேணிடை |
| ௧௬௨ | 13 | பொழுதெனக்கூறுந | பொழுதெனத் தெளிக்குந |
| ,, | 20 | அணிகினர் | அணிகிளர் |
| ௧௬௬ | 2 | திருநாள் இக்காலத்து | (திருநாட்காலத்து) |
| ௧௭௧ | 21 | உரிப்பெருட் | உரிப்பொருட் |
| ௧௭௨ | 2 | ளிவ ளொன | ளிவளொன |
| ௧௭௪ | 15 | சினையொடேம் | சினையொடும் |
| ,, | 34 | இளவண்டியாழ் | இனவண்டியாழ் |
| ௧௮௪ | 18 | † வகல் | வகல் |
| ௧௯௨ | 6 | தான் | (தாம்) |
| ௧௯௫ | 20 | வினிப்ப | விளிப்ப |
| ,, | 24 | தா ழருயி | தா ழருவி |
| ௧௯௭ | 5 | மலர்த்தே னூத | (மலர்தேனூத) |
| ,, | 16 | விறலியர் | விறலியது |
| ,, | 36 | வெண்பதற்கு | வென்பதற்கு |
| ௧௯௯ | 7 | காதலின்று | (காதலினின்று) |
| ௨௦௨ | 6 | னின்னதூஉங் | னின்னதாஉங் |
| ,, | 14 | குறிப்முற்றுய் | குறிப்புமுற்றுய் |
| ௨௦௬ | 32 | சூராமகளிரி | சூரரமகளிரி |
| ௨௧௩ | 13 | பொலிவிழந்தாற் | (பொலிவழிந்தாற்) |
| ,, | 14 | விழந்தவள் | வழிந்தவள் |
| ௨௧௫ | 18 | றன்னையருந் | றம்மையருந் |
| ௨௧௬ | 20 | கண்ணு தென்கண் | கண்ணுகென்கண் |
| ௨௨௫ | 17 | கலைவியான் | தலைவி, யான் |
| ௨௩௧ | 11 | இயற்பட்டு | இயற்பட |
| ௨௩௨ | 15 | குறைத்தீர | குறைதீர |
| ௨௪௫ | 31 | பிறிவுறு | பிரிவுறு |
| ௨௪௮ | 12 | மொழிந்தனள் | (மொழிந்தன) |
| ௨௫௦ | 2 | யொலியிற் | யோலிற் |
| ,, | 36 | ஓவில் | ஒலியில் |
| ௨௫௧ | 8 | மீளவும் | (மிகவும்) |
| ௨௫௬ | 10 | கெட்டதென்று | (கெட்டது; இன்று) |
| ,, | 35 | சிறபுறம் | சிறுபுறம் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௨௬௧ | 15 | அகலிளை | அகலிலை |
| ௨௭௧ | 9 | நினைவனள் | (நினையினள்) |
| ௨௭௩ | 11 | வேங்குழல் | வேய்ங்குழல் |
| ௨௭௪ | 22 | கெழணி | கேழணி |
| ௨௭௭ | 11 | யினரேய்க்கு | யிணரேய்க்கு |
| ,, | 12 | துயிலலள் | (துயிலிலள்) |
| ,, | 15 | எழுச்சியழகு | எழுச்சி அழகு |
| ௨௭௯ | 9 | லாரிடை | வாரிடை |
| ,, | 16 | நசை | நசைஇ |
| ,, | 20 | யிலந்கு | யிலங்கு |
| ,, | 31 | தோழியின் | தோழியினுன் |
| ௨௮௦ | 3 | (க) மாஅ லஞ்சிறை | மாஅ(க)லஞ்சிறை |
| ௨௮௮ | 34 | தலைவி | தோழி |
| ௨௯௧ | 29 | அவனெனவுஞ் | (அவனையெனவுஞ்) |
| ௨௯௩ | 22 | கள்வழி | களவழி |
| ௨௯௬ | 16 | "பின்னுதல்...பின்னிய | பின்னுதல்..."பின்னிய |
| ,, | 27 | ரவல்மொடு | ரவலமொடு |
| ௩௦௦ | 15 | ப்க்கமலை | பக்கமலை |
| ௩௦௨ | 16 | ணிகன்மிகு | ணியன்மிகு |
| ௩௦௪ | 20 | யரவின் | அரவின் |
| ௩௦௬ | 7 | குடிலிலிருக்கும் | குடியிலிருக்கும் |
| ௩௧௬ | 6 | பாங்கிவரவு விலக்க | பாங்கி வரவுவிலக்க |
| ௩௨௦ | 7 | மாற்றுக்கால் | மாற்றுக்கால் |
| ,, | 25 | ௫௮: | ௫௧: |
| ௩௨௧ | 26 | பின்னர்க்கண்கள் | பின்னர் அக்கண்கள் |
| ௩௨௩ | 3 | மாற்றுக்கால் | மாற்றுக்கால் |
| ,, | 6 | இவள் ஆற்றுத | இவளாற்றுத |
| ,, | 10 | கனவின் ஆற்றல் | (கனவினாற்றல்) |
| ௩௨௪ | 2 | கொடாத | கெடாத |
| ௩௨௭ | 13 | உரைதற்கு | உறைதற்கு |
| ௩௩௨ | 20 | துணிதலுமின்று | துணிதலுமின்றி |
| ௩௪௪ | 14 | நச்; | பே; |
| ௩௪௫ | 6 | பெய்தற்றொழிலையுடய | பெய்தற்றொழிலையுடைய |
| ,, | 26 | சிலப் | சிலப் |
| ௩௫௩ | 17 | மழையைப் பெற்ற | (மழையையேற்ற) |
| ௩௫௮ | 2 | வாய்ந்த | (வாய) |
| ௩௭௪ | 21 | என்பவைபோல | என்பதுபோல உயர்இணைப் |
| ,, | 32 | புண்மை | புன்மை |
| ௩௭௯ | 7 | அருளியல் | அருளீயல் |
| ௩௮௦ | 4 | நூல் உயர்ந்த | (நூலும் அந்த) |
| ௩௮௭ | 15 | முகமொப்ப | (முகம்பொற்ப) |
| ௩௯௫ | 8 | குறைந்தது | குறைந்து |
| ௪௧௩ | 12 | மவள் | மவன் |
| ௪௧௫ | 2 | ௨௦ | ௨௧ |

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪௨௫ | 12 | நச்சினியார்க் | நச்சினார்க் |
| ௪௩௨ | 8 | வேண்டாரினெடுத்தேத்து | வேண்டாரிலெடுத்தேத்து |
| ௪௩௩ | 11 | வட்டியிலே | வட்டிலிலே |
| ௪௩௫ | 5 | அவர்க்கு | (அதற்கு) |
| ௪௪௪ | 5 | கொய்யுத்தழை | கொய்யுந்தழை |
| ௪௪௭ | 28 | நீரரர் | நீரார் |
| ௪௫௧ | 20 | மூன் றும் | மூன்றும் |
| ௪௫௨ | 21 | ரிணைய | ரிணைய |
| ,, | 24 | கொமூதி | கொழுதி |
| ௪௫௩ | 4 | புரிபு | (புரியு) |
| ,, | 5 | யுலமந்தாய் | (யுலமந்தார்) |
| ,, | 25 | கூட்த்தை | கூட்டத்தை |
| ௪௫௪ | 2 | ௫ | ௪ |
| ,, | 14 | நெய்தலில்நேர் | (நெய்தலினெதிர், |
| ௪௫௫ | 6 | புரிபு | (புரியு) |
| ,, | 7 | யுலமந்தாய் | (யுலமந்தார்) |
| ௪௫௮ | 9 | புலந்து—கூறினள் | புலந்து கூறினள் |
| ௪௬௦ | 34 | இங்கு | இங்குக் |
| ௪௬௨ | 30 | கிமூத்தி | கிழத்தி |
| ௪௬௩ | 36 | அலம்வரும் | அலம்வரும் |
| ௪௬௪ | 15 | தனிப்ப | தணிப்ப |
| ,, | 26 | குறிப்பில | குறிப்பிவ |
| ௪௬௬ | 4 | பொருந்தும் | (பொருந்தின) |
| ௪௭௧ | 2 | புதவ்வனை | புதல்வனை |
| ,, | 35 | சூ. ௧௦. | சூ. ௧௦. இளம். |
| ௪௭௪ | 11 | கிளைபாட | (கிளைபட) |
| ௪௭௫ | 28 | தொடக்கத்த | தொடக்கத்துப் |
| ௪௭௬ | 2 | கிளைபாட | (கிளைபட) |
| ௪௭௭ | 11 | வேய்த்திறஞ் | (வேய்திறஞ்) |
| ,, | 31 | ஊடலுணர்வனவும் | ஊடலுணர்வளவும் |
| ௪௮௦ | 33 | பயிற்றுவானை | பயிற்றுவாரை |
| ௪௮௧ | 3 | அதிலே | (அவற்றிலே) |
| ,, | 13 | வேய்த்திறஞ் | (வேய்திறஞ்) |
| ௪௮௨ | 14 | சூ. அ. மேற் | சூ. அ. நச். மேற் |
| ௪௮௫ | 8 | தாம் | (நாம்) |
| ,, | 12 | வென்றுள் | வென்றுன் |
| ,, | 27 | கதவிற் | கதவீற் |
| ,, | 28 | றுய்சென்றுங்கு | றுச்சென்றுங்கு |
| ,, | 37 | நாம்இனி | தாம்இனி |
| ௪௮௭ | 7 | றீதோர் | (றீதோ) |
| ௪௮௮ | 21 | காந்தியான்காக்க | காந்தியானரக்க |
| ௪௯௦ | 8 | றீதோா | (றீதோ) |
| ௪௯௨ | 20 | வொழிந்தகிடக்க | வொழிந்துகிடக்க |
| ௪௯௩ | 17 | சேர்ந்து | (சேந்து) |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪௯௫ | 7 | சேர்ந்து | (சேந்து) |
| ௪௯௬ | 3 | விருப்பத் | விருப்பத் |
| ,, | 14 | சூடின | (சூட்டின) |
| ,, | 15 | வாராயோவென | (வாராயென) |
| ,, | 17 | தம் | (தன்) |
| ,, | 18 | கலங்களில் | (கலங்களின்) |
| ௫௦௨ | 14 | சுறவேறென்றூர் | சுறுவேறென்றூர் |
| ,, | 34 | சுறு | சுற |
| ௫௧௨ | 10 | முறைகோடாக் | முறைக்கொல்காக் |
| ,, | 12 | போல் | போற் |
| ௫௧௭ | 2 | போல் | போற் |
| ௫௧௯ | 14 | குன்ற விறுவரை | (குன்ற வுறுவரை) |
| ௫௨௧ | 11 | தன்மையாகிய | (தன்மையராகிய) |
| ,, | 23 | இப்பகுதியை 'பார்ப்பனி | இப்பகுதியை மேற்கோள் காட்டி இது பார்ப்பனி |
| ௫௨௩ | 7 | நவிதலை | நவிதலை |
| ,, | 12 | தகையது | (தனியது) |
| ,, | 16 | தகைமையினை | (தனிமையினை) |
| ,, | 19 | உணர்வென்னும் | (புணர்வென்னும்) |
| ௫௨௭ | 15 | நீர் வாய்ப்பதத்த | நீர்வாய்ப் பதத்த |
| ௫௩௫ | 15 | தெவனு | தெவனோ |
| ௫௩௬ | 19 | பொழிதிற் | பொழுதிற் |
| ௫௩௭ | 16 | (௩) கண்டது | கண்டது |
| ௫௪௩ | 25 | நல்லார் | னல்லார் |
| ௫௪௪ | 13 | பாடழிந்த | (பாடழிந்து) |
| ,, | 14 | இதற்கு | (ஊடுதற்கு) |
| ௫௪௬ | 6 | மற்று | (மாற்று) |
| ௫௪௮ | 15 | மற்று | (மாற்று) |
| ,, | 22 | அழுந்திய | (அழுந்தி) |
| ௫௫௨ | 21 | யிரும்புகள் | (யரும்புகள்) |
| ௫௭௧ | 5 | வருவாயாக | (அருள்வாயாக) |
| ௫௭௨ | 22 | கிறுத்தற்றூற்றோ | கிறுத்தற்றூத்தோ |
| ௫௭௬ | 12 | யிளிப்பட்டன | யினிப்பட்டன |
| ,, | 17 | கொண்டோடும் | கொண்டாடும் |
| ,, | 21 | கொண்டோடும் | கொண்டாடும் |
| ௫௭௮ | 10 | யிளிப்பட்டன | யினிப்பட்டன |
| ௫௮௩ | 23 | கொளீஇய வசை | கொளீஇ யசை |
| ௫௯௨ | 21 | கேட்டேடன் | கேட்டேன் |
| ௫௯௩ | 30 | க௫௬. | க௬. |
| ,, | 31 | யேனைப்பாற் கணும் | யேனைப் பாற்கணும் |
| ௫௯௮ | 4 | சார்ர்த | சார்ந்த |
| ௫௯௯ | 3 | வந்தவிவ் | வந்தவவ் |
| ,, | 23 | முனை | முளை |
| ௬௦௫ | 20 | விழப்பாளை | வுழப்பாளை |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| ௬௦௬ | 13 | விழுப்பாளே | வுழப்பாளே |
| ,, | 28 | தக்கதண்டஞ் | தகத்தண்டஞ் |
| ௬௧௦ | 16 | சேணிகந்த | சேணிகந்த |
| ௬௧௮ | 7 | செரிய | (சரிய) |
| ௬௨௩ | 12 | சொரிய | (சரிய) |
| ௬௩௦ | 13 | இவை | (அவை) |
| ௬௩௪ | 31 | மூடிகிய | மூடுகிய |
| ௬௪௭ | 20 | கிடக்கும் | (கிடக்கும்படி) |
| ௬௪௮ | 12 | செறிவாயேற்றின் | செறிவாய் ஏற்றின் |
| ௬௫௧ | 14 | வாதுபெரி | (வளர்பெரி) |
| ௬௫௭ | 10 | சுற்றவணவாகிய | (சாற்றவணாகி) |
| ௬௬௦ | 12 | யிறுபிறுபு | (பிறுபிறுபு) |
| ௬௬௧ | 16 | வதுபெறி | (வளர்பெரி) |
| ௬௬௨ | 30 | என்பனுலும் | என்பதனுலும் |
| ௬௬௪ | 17 | விரும்பின | விரும்பிண |
| ,, | 19 | கனங்கொள் | கணங்கொள் |
| ,, | 28 | புயர்மங்குலி | புயன்மங்குலி |
| ௬௬௫ | 10 | சேகில் | செகில் |
| ,, | 11 | செயிரிற் | (செயிரிக்) |
| ,, | 18 | வேள்ளேறு | வெள்ளேறு |
| ௬௬௭ | 7 | தாவி | (தூவி) |
| ௬௬௯ | 15 | புள்ளிகனே | புள்ளிகளே |
| ,, | 16 | கிறத்தை | (புகர் கிறத்தை) |
| ௬௭௧ | 16 | மறைத்தற்கு | (மறைதற்கு) |
| ,, | 23 | கொளவிடங் | கொள்விடங் |
| ௬௭௨ | 2 | (ச) | (க) |
| ,, | 3 | சேகில் | செகில் |
| ,, | 4 | (க) செயிரிற் | (உ) (செயிரிக்) |
| ௬௭௪ | 23 | விரும்பக்கூறியது | (விருப்பங்கூறியது) |
| ,, | 32 | வெனத் | வென நீண்டு காவெனத் |
| ௬௮௪ | 9 | கடவேம்; | (கடவேம், தழுவிக்கொண்டு பொதிந்துவிடக்கடவேம்;) |
| ௬௮௮ | 15 | எழை | எழை |
| ௬௯௯ | 9 | (எ) பனிப்பூங் (சு) | (சு)பனிப்பூங்(எ) |
| ௭௦௦ | 16 | யாம் போவேமென | (யாம் இப்பொழுதே போவேமென) |
| ௭௦௫ | 3 | சென்றுநின்று | (சென்று பெயராது நின்று) |
| ௭௨௪ | 2 | கண்டு அறிந்த | கண்டறிந்த |
| ௭௨௫ | 17 | எ-து: கின் | (எ-து: அதுகேட்டவள் நின்) |
| ௭௨௬ | 24 | ஏறுநாகு | ஏறு, நாகு |
| ,, | 29 | கா ரெதிரேற் | கா ரெதிரேற் |
| ௭௨௯ | 4 | வேழைபை | வேழையை |
| ௭௩௫ | 25 | ஞெக்கிக் கொடுமையா | ஞெக்கித் தொடுவாயி |
| ௭௩௯ | 29 | கண்கமழ் | கட்கமழ் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| எ௪எ | 17 | (௪) | (௫) |
| ,, | 27 | விளை | வினை |
| எ௪௯ | 25 | ௧, "நனவிற் புணர்ச்சி | உ. "நனவிற் புணர்ச்சி |
| ,, | 27 | உ. (அ) | ௧. (அ) |
| எ௫௦ | 10 | "சாரு | "காரு |
| ,, | 22 | இது | இஃது |
| எ௫௨ | 6 | வாள்கொளா | வாள்கொள |
| ,, | 24 | செந்தீப்பேண் | செந்தீப் பேண |
| எ௫எ | 13 | கண்டு | கண்டு |
| ,, | 18 | உட்குதலையுடைய | உட்குதலையுடைய |
| ,, | 38 | அத்தமகிரியை | அத்தமகிரியை |
| எ௫௯ | 34 | மருண்மாலை | மருண்மாலை |
| எ௬௧ | 13 | தலைவி ஆற்றாமை | தலைவியாற்றாமை |
| எ௬௫ | 28 | சிறுபொற் | சிறுகோற் |
| எ௬௯ | 4 | நெஞ்சந்தான் | நெஞ்சம், தான் |
| ,, | 5 | ஒளித்தவர் | ஒளித்த அவர் |
| எஎ௪ | 21 | பிரிவில்லாய் | (பிரிவில்லார்) |
| எஎ௨ | 34 | புலப்புட்டா | புலப்பட்டா |
| எஎ௫ | 23 | திளௌபதி | திரௌபதி |
| எஎஎ | 20 | பிரிவில்லாய் | (பிரிவில்லார்) |
| எ௮௪ | 8 | கண்டவை | கண்டது |
| எ௮௮ | 27 | ௧௧-ஆம் | ௧௧-ஆம் |
| ௮௦௫ | 3 | யுழப்பாளைக் | யுழப்பாளைச் |
| ௮௨௧ | 20 | யுழப்பதை | யுழந்ததை |
| ௮௨௩ | 2 | வடிவினையுடையவாய் | வடிவினையுடைய வாய |
| ௮௨௫ | 12 | தாழைப் | (தாழை) |
| ௮௨௬ | 6 | தாழைப் | (தாழை) |
| ௮௨எ | 5 | தாழைப்பூ | (தாழை பூ) |
| ௮௩௧ | 13 | வொளித்தாங்கே | வொலித்தாங்கே |
| ௮௩௪ | 23 | 'புணரிய னிலையுடை | 'புணரிய னிலையிடை |
| ௮௫௩ | 10 | வந்த | (அந்தப்) |
| ௮௫௮ | 26 | சிலப். எ௦-எ௧ | சிலப். (உ௬) எ௦-எ௧ |
| ௮௫௯ | 31 | ௮௫௮: உ-ஆம் | ௮௫௮: ௩-ஆம் |
| ௮௬௩ | 10 | குயவாகு | குயலாகு |
| ௮௬௫ | 29 | சூ. ௫; நச்; | சூ. ௫; பே; |
| ௮௬௮ | 2 | சுடப்பட்டு | (சுடர்பட்டு) |
| ௮எ௦ | 32 | பெயரி. சூ. ௩௩ | பெயரி. சூ. ௩௩. நச் |
| ௮எ௩ | 28 | மென்றோடை | மென்றொடை |
| ௮எ௮ | 19 | கூறின் | (கூறுமின்) |
| ௮௮௨ | 35 | தொல். மெய்ப். சூ. உ௨, நச். | தொல். மெய்ப். சூ. உ௨. பே |
| ௮௮௪ | 28 | ௪௫. | ௪௫. நச். |
| ,, | 12 | வஞ்சுளைமுத்தி. ௧௧. | வஞ்சுளைமுத்தி. ௧௧. |
| ௮௮௫ | 15 | ௮௧௨-ஆம் | ௮௧௩-ஆம் |
| ௮௮௬ | 23 | வரவிடைப் | வரைவிடைப் |

# பிழையும் திருத்தமும்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௮௯௮ | 34 | தொல். மெய்ப்; சூ. க. நச். | தொல். மெய்ப். சூ. க. பே. |
| ௯௧௭ | 10 | விழித்துப் | (விடுத்துப்) |
| ௯௧௯ | 17 | ஞாயிறினி | (ஞாயிறே நீ) |
| ௯௨௦ | 12 | யாவரு | யாவிரு |
| ,, | 21 | துனையுநர் | (துனையினர்) |
| ,, | 25 | ணரிப்ப வரி வாரப் | ணரிப்பலரி வாரப் |
| ௯௨௪ | 12 | ஞாயி றினி | (ஞாயிறே நீ) |
| ௯௨௭ | 5 | கள்வலை | கள்வனை |
| ௯௨௯ | 5 | வெய்தந்தார் | வேய்தந்தார் |
| ,, | 14 | போலே | (போன்று) |
| ௯௩௦ | 13 | மாய்ப்யதோர் | மாய்ப்பதோர் |
| ௯௩௧ | 2 | முறையிபிற் | முறைப்பிற் |
| ,, | 3 | எதிர்கொள்ளு | எதிர்கொள்ளுஉ |
| ௯௩௪ | 13 | இசந்த | (இழந்த) |
| ௯௩௫ | 23 | எதிர்கொள்ளு | எதிர்கொள்ளுஉ |
| ௯௩௯ | 31 | காட்டிச் | காட்டி |
| ௯௪௦ | 8 | விடுவானே | விடுவனே |
| ௯௪௧ | 15 | நகையின் | (நகையன்மின்) |
| ௯௪௪ | 25 | காட்டிச் | காட்டி |
| ௯௪௮ | 12 | நகையொழிந்து | (நகையொழித்து) |
| ௯௪௯ | 2 | நரணமும் | நாணமும் |
| ௯௫௦ | 4 | நனிநீத்த | (நலநீத்த) |
| ௯௫௨ | 4 | நனிநீத்த | (நலநீத்த) |
| ௯௫௫ | 14 | செய்நன்றிக் | செய்ந்நன்றிக் |
| ௯௫௮ | 19 | எய்கைனுலே | எய்கையினுலே |
| ௯௫௯ | 3 | சுடுகைனுலே | சுடுகையினுலே |
| ,, | 13 | ஞெவிக்கழை | ஞெலிகழை |
| ,, | 36 | கொள்றை | கொன்றை |
| ௯௬௦ | 19 | நக்க ஒள்ளிதாகிய | நக்கு ஒள்ளிதாகிய |
| ,, | 29 | உயையும் | உரையும் |
| ௯௬௧ | 21 | பெய்யாதவாறு | பொய்யாதவாறு |
| ௯௬௨ | 25 | திலை | திணை |

செய்யுட்கள் ஒரே தொடராகவும் உறுப்புறுப்பாகவும் பதிப்பிக்கப்பெற்றிருப்பதனால் ஒருபிழையே அவ்விரண்டிடத்தும் பிழையாகக் காட்டப்பெற்றிருக்கிறது. அறிஞர் பார்க்கும்போது அவர் கண்ணிற்படாது ஒளிக்கும் பிழைகள் இன்னமும் சில இருக்கும். அவற்றையும் கண்டவர்கள் திருத்திக்கொள்ளல் வேண்டும்.

**செந்தமிழ்க் கட்டளை வெண்பா**

நன்றுதீ தாய்ந்து நவில்க வடக்குக
என்று புலவர்க் கிசைத்தலேன்—தொன்று
சிறுபிறை பொங்குகடுச் சென்னி மிடற்றை
யிறைபெற வைத்தா னெனின்.